श्रीकृष्णाय परस्मै ब्रह्मणे नमः ॥



ஸ்ரீ ராம ஜயம்
ஆவணி மீ 3உ
அநந்தன்

श्री पुरुषसूक्तादि मन्त्राः ।

# ஸ்ரீ புருஷஸூக்தம் முதலியன



இதில்

புருஷஸூக்தம், விஷ்ணு ஸூக்தம், ஸ்ரீஸூக்தம்,
துர்க்கா ஸூக்தம், இவை தமிழுரையுடன் அடங்கியுள்ளன.

இச் சிறந்த உரை

மஹா மஹோபாத்தியாய வேதாந்த கேஸரீ பங்காரு
ப்ரம்ஹஸ்ரீ கணபதி சாஸ்திரிகள் அவர்களின் முக்கிய
சிஷ்யரும், வியாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கதரும்,
பாகவத பகவத்கீதோபன்யாஸகரும், சோதிட மந்திர சாஸ்திர
வித்வானும், ஆர்யமதஸம்வர்த்தனீ பத்திராதிபருமான
அபிநவவ்யாஸ, குலபதி, அபிநவ சுகப்ரம்ஹ

**ப்ரம்ஹ ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்**

அவர்களால் இயற்றப்பட்டு தமது ஆர்யமத ஸம்வர்த்தனீ
பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிடப்பட்டது.

இரண்டாம் பதிப்பு





Rs 3

## விஜ்ஞாபனம்

எங்களிடம் கிடைக்கக் கூடிய புஸ்தகங்களின் ஜாபிட்லாக்கு ஒவ்வொரு புஸ்தகத்தின் முடிவிலும் வைக்கப்பட்டிருக்கிறது. அப்புஸ்தகங்களை வீ. பீ. பீ. மூலமோ நேரிலோ பெற்றுக் கொள்ளலாம்.

புஸ்தகங்கள் கிடைக்குமிடங்கள் :—

**கடலங்குடி நடேச சாஸ்திரிகள்,**

“ கஸ்தூரிரங்க விலாஸ் ” 17, நடேசய்யர் தெருவு,

தியாகராயநகர், :: புது மாம்பலம், :: சென்னை.

அல்லது

**ஆர்யமத ஸம்வர்த்தனீ பிரஸ்,**

72, பெரிய தெருவு, :: திருவல்லிக்கேணி, :: சென்னை.

குறிப்பு:—இப்புஸ்தகத்தை 1-2-0க்கு தபால் ஸ்டாம்பு அனுப்பியும் பெறலாம்.

# புருஷ ஸூக்தம்.

## முகவுரை

'புருஷ' என்பதற்கு புரு=ஸர்வப் பிராணிகளுடைய ஹிருதய குஹையில், ஷ=சயனஞ் செய்கின்றவர், அல்லது புர்=எல்லாவற்றிற்கும் முதலில் உஷ=இருப்பவர் என்ற யோகத்தால் ஸர்வாந்தர்யாமி என்றும், ஸர்வ ஜகத் காரண பூதரென்றும் அர்த்தமேற்படுவதால் அத்தகைய மஹிமைதங்கிய ஸ்ரீ நாராயணனைப் பிரதி பாதிக்கின்ற सहस्रशीर्षा என்று தொடங்கி साध्यास्सन्ति देवा: என்றது வரை படிக்கப்படும் வைதிக மந்திரங்களுக்கு புருஷ ஸூக்தம் எனப் பெயரிடப் பட்டிருக்கிறது.

உத்தர நாராயணானுவாகத்தில் ஹ்ரீதேவி, லக்ஷ்மீதேவி இவர்கள் ஸ்ரீ நாராயணனுடைய பத்னிகளென்றும், அவர்களுடன் கூடினவராய் பகவானை உபாஸித்தால் ஸகல க்ஷேம லாபத்தையுமடையலா மென்றும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. பிறகு மஹாநாராயணானுவாகத்தில் உபாஸ்யனான பகவானின் கல்யாண குணங்களும், அவரை உபாஸிக்க வேண்டிய விதமும், மற்றும் அது விஷயமான ரஹஸ்யங்களு முபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் புருஷ ஸூக்த விஷயமாக ஸநத்குமாரஸம்ஹிதை முதலிய நூற்களிற் சில விசேஷங்கள் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை இங்கு எழுதுகிறோம்

पूर्वं सनत्कुमारेण पृष्टो विष्णुस्सनातन: । उक्तवान् पौरुषं होम विधानं कामदं नृणाम् ॥ वसिष्ठायोदितं तेन चात्रये सोऽब्रवीदिदम् ।

बोधायनाय तेनोक्तं स स्वशिष्येभ्य उक्तवान् ॥ वक्ष्यामि तदहं पुण्यं शृणुध्वं मुनिसत्तमाः । पुत्रप्रदमपुत्राणां जयदं जयकामिनाम् ॥ श्रीदं श्रीकामिनां पुंसां राज्यदं राज्यकामिनाम् । धान्यदं धान्यकामानां कीर्तिदं कीर्तिकामिनाम् ॥ भुक्तिदं भुक्तिकामानां मुक्तिदं मुक्तिकामिनाम् । बहुना किमिहोक्तेन सर्वसिद्धिप्रदं नृणाम् ॥

*ஸநத்குமாரரால் கேட்கப்பட்ட நாராயணன், புத்திரன், ஜயம், ஸம்பத்து, ராஜ்யம், தான்யம், கீர்த்தி, புக்தி, முக்தி முதலிய ஸர்வ பலனையும் தரக்கூடிய ஸ்ரீ புருஷ ஸூக்த ஹோமத்தின் முறையை யுபதேசித்தார் என்று தொடங்கி ஹோமஞ் செய்யும் முறையும் பின் வருமாறு உபதேசிக்கப் பட்டிருக்கிறது.*

### புத்திரார்த்திகளால் செய்ய வேண்டிய
### புருஷ ஸூக்த ஹோம விதி.

*ஶுக்லபக்ஷப்ரதமையன்று தொடங்கி கிருஷ்ணபக்ஷ ப்ரதமை முடிய 16 நாட்களில் ஒவ்வொரு நாளும் புருஷ ஸூக்தத்திலுள்ள 16 ருக்குகளைச் சொல்லி பாயஸத்தால் 1008 ஹோமஞ் செய்ய வேண்டும். அல்லது 12 நாள் அல் லது 6 நாட்களாவது ஹோமஞ் செய்ய வேண்டும். இந்த ஹோமஞ் செய்யத் தொடங்கு முன் ஸந்தான கோபால மந்தி ரோபதேசத்தைப் பெற வேண்டும்.*

## श्रीसन्तानगोपाल मन्त्रः ॥

अस्य श्रीसन्तानगोपालकृष्णमहामन्त्रस्य—आनन्दनारदादयो ऋषयः । अनुष्टुप्छन्दः । सन्तानगोपालकृष्णो देवता । अम्, आम्, बीजम् । इम्, ईम्, शक्तिः । उम्, ऊं कीलकम् । सन्तानगोपालकृष्ण-प्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः । अम्, आम्, अङ्गुष्ठाभ्यां नमः ।

इम्, ईं, तर्जनीभ्यां नमः। उम्, ऊम्, मध्यमाभ्यां नमः। अम्, आम्, अनामिकाभ्यां नमः। इम्, ईम्, कनिष्ठिकाभ्यां नमः। उम्, ऊम्, करतलकरपृष्ठाभ्यां नमः। (इति करन्यासः) अम्, आम्, हृदयाय नमः। इम, ईम्, शिरसे स्वाहा। उम, ऊम्, शिखायै वषट्। अम, आम, कवचाय हुम्। इम्, ईम्, नेत्रत्रयाय वौषट्। उम्, ऊम्, अस्त्राय फट्॥ (इति हृदयादिन्यासः) भूर्भुवस्सुवरोमिति दिग्बन्धः। ध्यानम्—

पाणौ पायसभक्तमाहितरसं बिभ्रन्मुदा दक्षिणे
सव्ये शारदपूर्णचन्द्रधवलं ह्यय्यंगवीनं दधत्।
कण्ठे कल्पितपुण्डरीकनखमप्युद्दामकाञ्चि वहन्
देवो दिव्य दिगंबरो दिशतु नः पुत्रं यशोदाशिशुः॥

लं पृथिव्यात्मने गन्धं समर्पयामि। हं आकाशात्मने पुष्पाणि समर्पयामि। यं वाय्वात्मने धूपमाघ्रापयामि। रं अग्न्यात्मने दीपं सन्दर्शयामि। वं अमृतात्मने अमृतं निवेदयामि। सं सर्वात्मने सर्वोपचारान् समर्पयामि॥ मूलमन्त्रः—

देवकीसुत गोविन्द वासुदेव जगत्पते।
देहि मे तनयं कृष्ण त्वामहं शरणं गतः॥
देवदेव जगन्नाथ गोत्रवृद्धिकर प्रभो।
देहि मे तनयं शीघ्रमायुष्मन्तं यशस्विनम्॥

பிறகு அனுக்ஞை செய்து கொண்டு शुभे शोभने....तिथौ-....नक्षत्रे...राशौ जातस्य...शर्मणः मम...नक्षत्रे...राशौ जातायाः ....नाम्न्याः मम धर्मपत्न्याश्च आवयोः इहजन्मनि जन्मान्तर सहस्रे वा ज्ञानाज्ञानकृतसन्तानप्रतिबन्धकीभूतानां, गुरुद्वेषण, बालघातन, बालताडन, बालतर्जन, गोवत्सवियोजन, परहृत्क्लेशक-

रण, प्राण्यंडभेदन, अष्टकाद्यकरण, अन्यसुतविद्वेषण, मृगशावहनन, गर्भध्वंसनरूपैकादशदुरितानां निवृत्तिद्वारा आयुष्मत्सुरूपसुगुणानेकसुपुत्रावाप्त्यर्थं श्रीभूमीसमेत श्रीमहाविष्णु प्रसादसिद्ध्यर्थं एभिर्ब्राह्मणैस्सह सनत्कुमारोक्तप्रकारेण आचार्यमुखेन ऋत्विङ्मुखेन च पुरुषसूक्तजपहोमकर्म करिष्ये । என்று ஸங்கல்பஞ் செய்து கொண்டு ஆசார்ய வரணம் ருத்விக் வரணம் இவைகளை யஜமானன் செய்த பிறகு ஆசாரியன், தனது சரீரத்தில் புருஷ ஸூக்த மந்திரத்தால் संहारसृष्टिस्थितिन्यास ங்களைச் செய்து கொள்ள வேண்டும்.

अस्य श्रीपुरुषसूक्तन्यासमहामन्त्रस्य—अन्तर्यामी भगवान्नारायण ऋषिः, आद्यस्य पञ्चदशर्चस्य अनुष्टुप्छन्दः, अन्त्यायास्त्रिष्टुप्छन्दः, श्रीभूमीसमेत श्रीमहाविष्णुर्देवता । पुरुष एवेति बीजम् । नान्यः पन्था इति शक्तिः, एतावानस्येति कीलकम् । श्रीभूमीसमेत श्रीमहाविष्णुप्रसादसिद्ध्यर्थे पुरुषसूक्तन्यासमहामन्त्रजपे विनियोगः। अतो देवा अवन्तु नो यतो विष्णुर्विचक्रमे । पृथिव्यास्सप्तधामभिः ॥ ओं भूः, पुरुषायाङ्गुष्ठाभ्यां नमः । इदं विष्णुर्विचक्रमे त्रेधा निदधे पदम् । समूळ्हमस्य पांसुरे ॥ ओं भुवः, महापुरुषाय तर्जनीभ्यां नमः । त्रीणि पदा विचक्रमे विष्णुर्गोपा अदाभ्यः । अतो धर्माणि धारयन् ॥ ओं सुवः, ब्रह्मपुरुषाय मध्यमाभ्यां नमः। विष्णोः कर्माणि पश्यत यतो व्रतानि पस्पशे । इन्द्रस्य युज्यस्सखा । ओं महः, विष्णुपुरुषाय अनामिकाभ्यां नमः । तद्विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः । दिवीव चक्षुराततम्॥ ओं जनः, रुद्रपुरुषाय कनिष्ठिकाभ्यां नमः। तद्विप्रासो विपन्यवो जागृवां ँ सस्समिन्धते । विष्णोर्यत्परमं पदम् ॥ ओं तपस्सत्यं, सर्वपुरुषाय करतलकरपृष्ठाभ्यां नमः । एवं हृदयादिन्यासः । ध्यानम्—

गोक्षीराभं पुण्डरीकायताक्षं चक्राब्जाभ्यां शंखकौमोदकीभ्याम् ।
श्रीभूमिभ्यामर्चितं योगपीठे ध्याये देवं पूजयेत्पौरुषेण ॥
पञ्चोपचारान् कृत्वा—संहृतिन्यासं कुर्यात् ।

अथ संहृतिन्यास: ॥

(1) सहस्र...दशाङ्गुलम् । वामकरे ॥ पुरुष....अतिरोहति। दक्षिणकरे ॥ एतावा...अमृतं दिवि। वामचरणे ॥ त्रिपादूर्ध्व...अभि। दक्षिणचरणे ॥ तस्मा...पुर: । वामजानुनि ॥ यत्पुरुषेण...हवि: । दक्षिणजानुनि ॥ तं यज्ञं...ऋषयश्च ये । वामोरौ ॥ तस्माद्यज्ञा....श्चये। दक्षिणोरौ ॥ तस्माद्यज्ञात्सर्वहुत: । ऋचस्सा...जायत । नाभौ ॥ तस्मादश्वा...अजावय:। हृदये ॥ यत्पुरुषं...उच्येते । कण्ठे ॥ ब्राह्मणो ....अजायत । वामांसे ॥ चन्द्रमा...अजायत । दक्षिणांसे ॥ नाभ्या... अकल्पयन् । वदने ॥ सप्ता...पशुम् । अक्ष्णो: ॥ यज्ञेन...सन्ति देवा: । शिरसि ॥ ओं नमो नारायणाय ।

अथ सृष्टिन्यास: ॥

सहस्र शीर्षा....अत्यतिष्ठद्दशाङ्गुलम् । शिरसि ॥ पुरुष एवेदं ...यदन्नेनातिरोहति । अक्ष्णो: ॥ एतावानस्य...त्रिपादस्यामृतं दिवि। वदने ॥ त्रिपादूर्ध्व...साशनानशने अभि । दक्षिणांसे ॥ तस्माद्विरा... अथोपुर: । वामांसे ॥ यत्पुरुषेण हविषा...शरद्धवि: । कण्ठे ॥ तं यज्ञं बर्हिषि...साध्या ऋषयश्च ये । हृदये ॥ तस्माद्यज्ञात्सर्वहुत: । संभृ...त्रये । नाभौ ॥ तस्माद्य...यजुस्तस्मादजायत । दक्षिणोरौ ॥ तस्मादश्वा अजायन्त...अजावय: । वामोरौ॥ यत्पुरुषं...पादावुच्येते

---

* அந்தந்த ருக்குகளைப் படித்து குறிப்பிட்டிருக்கும் அந்தந்த அங்கங்களை தொட்டுக் கொள்ள வேண்டும்.

दक्षिणजानुनि॥ ब्राह्मणोऽस्य...शूद्रो अजायत । वामजानुनि ॥ चन्द्रमा....द्वायुरजायत। दक्षिणचरणे ॥ नाभ्या आसी.......लोकां ँ अकल्पयन। वामचरणे ॥ सप्तास्या...पुरुषं पशुम् । दक्षिणकरे ॥ यज्ञेन ...देवाः । वामकरे ॥ ओं नमो नारायणाय ।

अथ स्थितिन्यासः ॥

सहस्रशीर्षा...दशाङ्गुलम् । नाभौ॥ पुरुष एवेदं....अतिरोहति। दक्षिणोरौ॥ एतावानस्य....अमृतं दिवि । वामोरौ ॥ त्रिपादूर्ध्व...साशनानशने अभि । दक्षिणजानुनि ॥ तस्मा द्विराडजायत...अथो-पुरः । वामजानुनि ॥ यत्पुरुषेण....शरद्धविः । दक्षिण चरणे॥ तं यज्ञं...ऋषयश्च ये। वाम चरणे॥ तस्माद्यज्ञा....ग्राम्याश्च ये। दक्षिण-करे ॥ तस्माद्यज्ञा...यजुस्तस्मादजायत । वामकरे ॥ तस्मादश्वा...अजावयः। शिरसि॥ यत्पुरुषं...पादावुच्येते। अक्ष्णोः॥ ब्राह्मणोऽस्य ...शूद्रो अजायत। वदने॥ चन्द्रमा मनस...वायुरजायत। दक्षिणांसे॥ नाभ्या...अकल्पयन् । वामांसे ॥ सप्तास्या...पुरुषं पशुम् । कण्ठे ॥ यज्ञेन सन्ति देवाः । हृदये ॥ ओं नमो नारायणाय ।

பிறகு ப்ரம்ஹவரணம் முதல் முகாந்தம் வரை செய்து கொண்டு ஹோம குண்டத்திற்கு முன் பாகத்தில் வைக்கப் பட்ட கலசத்தில் ஸ்ரீ பூமீஸமேத நாராயணப் பிரதிமையை வைத்து அதில் புருஷஸூக்தத்திலுள்ள முதல் ருக்கைப் படித்து முதலில் தியானத்தையும் பிறகு श्रीभूमीसमेतं महाविष्णुमावाहयामि என்று ஆவாஹனத்தையும், பிறகு பிராணப்பிரதிஷ்டையையும், 2வதால் ஆஸனத்தையும், 3வதால் பாத்யத்தையும், 4வதால் அர்க்கியத்தையும், 5வதால் ஆசமநீயத்தையும், 6வதால் ஸ்நானத்தையும், 7வதால் வஸ்திரத்தையும், 8வதால் உபவீதத்தையும், 9வதால் கந்தத்தையும், 10வதால்

புஷ்பத்தையும், 11வதால் தூபத்தையும், 12வதால் தீபத்தையும், 13வதால் நைவேத்தியத்தையும், 14வதால் மந்திர புஷ்பத்தையும் 15வதால் பிரதக்ஷிணத்தையும் ஸமர்ப்பணஞ் செய்ய வேண்டும். பிறகு யஜமானன் பத்தினி இருவருக்கும் முன் சொன்னபடி संहृतिसृष्टि स्थिति நியாஸங்களைச் செய்து வைத்து, நீண்ட வாழையிலையில் வெண்ணெயினால் த்ரிகோணயந்திரம் எழுதி அதன் மேல் சிறிய வெள்ளிப்பாத்திரத்தில் சாலிக்கிராமத்தை வைத்து பத்தினியுடன் கூடயஜமானனைக்கொண்டு ஸ்ரீ பூமீஸமேத மஹா விஷ்ணுவின் பூஜையைமுன் சொன்னபடி செய்விக்க வேண்டும், பிறகு ஆசாரியன் அக்நியில் மகாவிஷ்ணுவை ஆவாஹனஞ் செய்து புருஷ ஸூக்த மந்திரத்தால் 16 உபசாரங்களைச் செய்து புருஷ ஸூக்தத்திலுள்ள 16 ருக்குகளைக் கொண்டு முறையே ஆஜ்ய ஹோமஞ் செய்ய வேண்டும். திரும்பவும் अन्वदान தர்மப்படி சருவை எடுத்துக் கொண்டு 16 ருக்குகளால் 16 தடவை அன்ன ஹோமஞ் செய்ய வேண்டும். பிறகு அவ்வளவு ஆஜ்ய ஹோமமுஞ்செய்யவேண்டும்.

பிறகு அக்நிக்குத் தென்பக்கத்தில் தர்ப்பத்தைக் கிழக்கு நுனியாக இரண்டாகப் பிரித்து வைத்துக் கொண்டு அரசஞ்சமித்து ஒன்றைஎடுத்து புருஷ ஸூக்தத்தின் முதல் ருக்கைப்படித்து ஹோமஞ்செய்து முன் இரண்டாகப்பிரித்து விரிக்கப்பட்டதர்ப்பங்களுள் தென்பாகத்திலுள்ளதர்ப்பத்தில் புருஷஸூக்த முதல் மந்திரத்தால் ஒரு அரசஇலையை வைக்க வேண்டும். இவ்விதமே இரண்டாவது ருக்கைப்படித்து ஒரு சமித்தை ஹோமஞ் செய்து அதனுலேயே மற்றுமோர் அரச இலையை முன் வைத்த இடத்தில் வைக்க வேண்டும். இவ்விதம் 8 ருக்குகளால் 8 சமித்துகளை ஹோமஞ் செய்து,

8 அரச இலைகளைத் தென் பக்கத்திலுள்ள தர்ப்பத்தில் வைத்து பிறகு 9-வது, ருக்கு முதல் 8 ருக்குகளாலும் முன் போலவே சமித்தால் ஹோமஞ் செய்து ஒவ்வொரு ருக்கினுலும் முன் போலவே ஒவ்வொரு அரச இலையை முன்வைத்த தர்ப்பத்திற்கு வடக்கிலுள்ள தர்பத்தில் வைக்க வேண்டும். பிறகு 16 ருக்குகளையும் படித்து ருக்கு ஒன்றுக்கு ஒரு தடவை வீதம் 16 தடவை ஆஜ்ய ஹோமஞ் செய்து ஹோமஞ் செய்யப்பட்ட ஆஜ்யத்தின் சேஷத்தால் முன் வைக்கப்பட்ட 16 அரச இலைகளையும் முறையே * உபஸ்தரணஞ் செய்ய வேண்டும். பிறகு பாயஸத்தைக் கையிலெடுத்துக் கொண்டு புருஷ ஸூக்தத்தின் முதல் ருக்கைப் படித்து பாதி பாகத்தை ஹோமஞ் செய்து சேஷத்தை முதலில் வைக்கப்பட்ட அரச இலையில் மறுபடியும் முதல் ருக்கைப் படித்து வைக்க வேண்டும். இரண்டாவது ருக்கைப் படித்து முன் போல் ஹோமஞ் செய்து மறுபடியும் இரண்டாவது ருக்கைப்படித்து சேஷத்தை இரண்டாவதாக வைக்கப்பட்ட அரச இலையில் வைக்க வேண்டும். இவ்விதமே மீதமுள்ள 14 ருக்குகளாலும் ஹோமஞ் செய்து பாயசத்தை அரச இலையில் வைக்க வேண்டும். பாயஸத்தை ஹோமஞ் செய்த பிரகாரமே ஆஜ்யத்தாலும் ஹோமஞ் செய்து ருக்குகளைப் படித்துக் கொண்டே முன் வைத்த பாயஸங்களில் முறையே அபிகாரணஞ் செய்ய வேண்டும். பிறகு வேறு 16 அரச இலைகளை எடுத்து முறையே ருக்குகளைப் படித்து முன் வைக்கப்பட்ட கிரமத்தை அனுசரித்து மூடவேண்டும். பிறகு ஆசாரியன் ருத்விக்குகளுடன் புருஷ ஸூக்தத்தை 63 தடவை திருப்பி ஒவ்வொரு ருக்குக்கும் ஒவ்வொரு ஆவிருத்தி வீதம் 1008 தடவை ஹோமஞ் செய்ய வேண்

* உபஸ்தரணம்—நெய்யைத் தடவுவது.

டும். பிறகு ஸ்விஷ்ட கிருத்தைச் செய்து முறைப்படி ஹோமத்தைப் பூர்த்தி செய்து விட வேண்டும்.

பிறகு கும்பம் யந்திரம் இவைகளில் ஆவாஹனஞ் செய்யப்பட்ட தேவதைகளுக்கு மறுபடியும் பூஜை செய்து **यज्ञेन-यज्ञम्** என்ற ருக்கினால் உத்வாஸனஞ் செய்ய வேண்டும் ஆனால் யந்திரத்தில் ஆவாஹனஞ் செய்யப்பட்ட தேவதையை மட்டும் உத்வாஸனஞ் செய்யக் கூடாது. பிறகு பிரதிமாதானம், கோதானம், முதலிய தானங்களைச் செய்து ருத்விக்களுக்கும் ஆசாரியனுக்கும் தனது சக்திக்குத் தகுந்தவாறு ‡ வித்த சாட்டியம் செய்யாமல் யஜமானன் தக்ஷிணையைக் கொடுக்க வேண்டும்.

பிறகு புருஷ ஸூக்தத்தின் முதல் ருக்கைப் படித்து முதலில் அரச இலையில் வைக்கப்பட்ட பாயஸத்தை பத்தினியைச் சாப்பிடும்படி செய்து அதே ருக்கைப்படித்து கும்பத்தின் தீர்த்தத்தையும் சாப்பிடும்படி செய்ய வேண்டும். இவ்விதமே முறையே அந்தந்த ருக்குகளைப் படித்து அந்தந்த பாயஸத்தைப் பிராசனஞ் செய்வித்து அந்தந்த ருக்கைப் படித்து தீர்த்தத்தையும் பிராசனஞ் செய்வித்து யந்திரம் போடப்பட்ட வெண்ணையையும் பிராசனஞ்செய்விக்கவேண்டும். பிறகு பிராம்ஹணர்களிடமிருந்து ஆசீர்வாதத்தை பெற்றுக் கொண்டு பிராம்ஹணபோஜனத்தை நன்றாய் நடத்திவைக்க வேண்டும். இவ்விதஞ் செய்தால் நிச்சயமாய் புத்திரனுண்டாவான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பகவத் பிரஸாதத்தில் மாத்திரம் விருப்பமுள்ளவனாயிருந்தால் அஷ்டாக்ஷர மந்திரத்தை ஆசாரியனிடமிருந்து ஸம்பிரதாயப்படி பெற வேண்டும். பிறகு சாலக்கிராமம் முத

---

‡ வித்த சாட்டியம்: லோபம்.

ஷிய பகவத்சான்னித்யம் பெற்ற அர்சா மூர்த்திகளில் இந்த புருஷ ஸூக்தத்திலுள்ள 16 ருக்குகளால் 16 உபசாரங்களைச் செய்து ஒவ்வொரு தினமும் பூஜை செய்து வர வேண்டும். அஃதுடன் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பகவத் கீதை முதலிய கிரந்தங்களைப் பாராயணஞ் செய்வது மிகவும் அவசியம். இவ்விதஞ் செய்தால் இம்மையில் ஸகல க்ஷேமங்களையுமடைந்து மறுமையில் பகவல் லோகத்தையுமடைவான் என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. ஆகவே பகவத் பிரஸாத ஹேதுவானதும், ஆஸ்திகர் யாவராலும் பொன்னே போல் போற்றத்தக்கதுமான இந்த புருஷ ஸூக்தத்தை यदेव विद्यया करोति श्रद्धया...तदेव वीर्यवत्तरं भवति [எதை அர்த்தானுஸந்தானத்துடனும், சிரத்தையுடனும் செய்து வருகிறானோ அதுவே வீரிய வத்தரமாக (அதிக பலனைத் தரகூடியதாக) ஆகின்றது] என்ற வசனப்படி அர்த்தானு ஸந்தானத்துடனும் பாராயணஞ்செய்து வந்தால் சகல க்ஷேமங்களையுமடையலாமென்பது நிச்சயம். அதற்காக சாஸ்திரங்களையும், ஸம்பிரதாயங்களையு மனுசரித்து இப் புருஷ சூக்தத்தை எளிய நடையில் தமிழில் பெயர்த்திருக்கிறோம்.

இக் கொடுமையான கலிகாலத்தில் பல காரணங்களால் தத்தமது சாகைப்படி வேதத்தை அத்யயனஞ் செய்யக்கூடாவிடினும் இந்த புருஷ சூக்தத்தை மட்டுமாவது அர்த்தானு சந்தானத்துடன் பாராயணஞ்செய்து வருவதின்மூலம் பகவத் பிரசாதத்தை யடைந்து இம்மை மறுமைகளில் சகல க்ஷேமத்தையுமடையும்படி பிரார்த்திக்கிறோம். இங்ஙனம் :

அபிநவவ்யாஸ, குலபதி, அபிநவ சுகப்ரம்ஹ

ப்ரம்ஹஸ்ரீ, கடலங்குடி, பண்டித நடேச சாஸ்திரிகள்.

17, நடேசய்யர் தெரு, : : மாம்பலம்.

श्रीमते वासुदेवाय नमः ॥

# ॥ श्री पुरुषसूक्तम् ॥

# ஸ்ரீ புருஷஸூக்தம்.

**सहस्रशीर्षा पुरुषः । सहस्राक्षः सहस्रपात् ।**
**स भूमिं विश्वतो वृत्वा । अत्यतिष्ठद्दशाङ्गुलम् ॥ १ ॥**

பதவுரை—सहस्रशीर्षा=ஆயிரக் கணக்கான தலைகளையுடையவரும் सहस्राक्षः = ஆயிரக்கணக்கான கண்களை யுடையவரும் सहस्रपात्=ஆயிரக்கணக்கான பாதங்களையுடையவரும் सः=லோகவேதப்ரஸித்தருமான पुरुषः=நாராயணன் भूमिम्=பூமியை (ப்ரம்ஹாண்டகோளத்தை) विश्वतः=எல்லாபாகத்திலும் वृत्वा=சூழ்ந்துகொண்டு दशाङ्गुलम्=பத்து அங்குலமளவுள்ள தேசத்தையும் अति=அதையும் தாண்டியும்(ப்ரம்ஹாண்டத்துக்குவெளியான எல்லாவிடத்திலும்) अतिष्ठत्=நிறைந்து நின்றார். (எ—று.)

கருத்துரை—ஸர்வ ப்ராணி *ஸமஷ்டி ரூபரும், அவ்யக்தம் மஹத்தத்வம்முதலிய அசேதனவர்க்கத்துக்கு விலக்ஷணரும் * புருஷபதத்தால் குறிக்கப்படுபவருமான நாராயணன் ஆயிரக்கணக்கான (அளவுகடந்த) சிரஸ், கண், பாதம் இவையுள்ளவராயும், அது மட்டுமின்றி ப்ரம்ஹாண்டத்துக்கு மேலும் எங்கும் பாலில் நெய்போல் வியாபித்துமிருக்கிறார் என்றும், அளவுகடந்த ப்ராணிகளின் சிரஸ், கண், பாதம்

---

* மரங்களின் கூட்டத்தைப் பொதுவாய்ச் சொல்லுமிடத்து 'வனம்' என்றும் தனியாய்ச் சொல்லுமிடத்து 'மாமரம், பலாமரம்' என்றும் சொல்லுவது வழக்கம். 'வனம்' என்பது ஸமஷ்டிப்பெயர். 'மாமரம்' என்பது முதலியன வியஷ்டிப்பெயர்.

முதலியவைகளே இவரது சிரஸ், கண், பாதம், இவைகளாக வாகின்றன வென்றும், அவரே எங்கும் வியாபித்திருப்பவ ரென்றும், அவரே ஸர்வாந்தர்யாமி என்றும் இந்த மந்திரத் தால் உபதேசிக்கப்பட்டது. (எ-று.)

அவதாரிகை—எவ்விதம் நிகழ்காலத்திலுள்ள எல்லா ப்ர பஞ்சத்துக்கும் புருஷபதவாச்யனை நாராயணன் ஶரீரியும், அந்தர்யாமியுமோ அவ்விதமே சென்ற காலத்திலும் வருங்கா லத்திலுமுள்ள ஸர்வப்ரபஞ்சத்துக்கும் வேறொருவன் ஶரீரி யாயும் அந்தர்யாமியாயு மிருக்கலாமோ வென்ற ஸாமான்ய மாகத்தோன்றும் சங்கையானது விலக்கப்படுகிறது—

**पुरुष एवेदँसर्वम् । यद्भूतं यच्च भव्यम् ।**
**उतामृतत्वस्येशानः । यदन्नेनातिरोहति ॥२ ॥**

(ப-ரை) इदम्=நிகழ்காலத்திலுள்ள यत्=யாதொரு ஜகத் துண்டோ भूतम्=சென்ற காலத்திலுள்ள यत्=யாதொரு ஜகத் துண்டோ भव्यञ्च=வருங்காலத்திலுள்ள यत्=யாதொரு ஜகத் துண்டோ (तत्) सर्वम्=அவை யாவும் पुरुष एव=புருஷபத வாச்யனை நாராயணனே. (எ-று)

(க-ரை) நிகழ்காலத்தில் போலவே சென்றகாலத்திலும் வருங்காலத்திலுமுள்ள ஸூக்ஷ்மஸ்தூலமான ஸகல ப்ரபஞ்ச த்துக்கும் ஸ்ரீமந்நாராயணனே சரீரி என்றும், அவரே ஸகல ப்ரபஞ்ச அந்தர்யாமி என்றும், முக்காலத்திலுமுள்ள ஸூ க்ஷ்மஸ்தூலமான ஸகலப்ரபஞ்சமும் அவரது ஶரீரமென்றும் **यस्य सर्वं शरीरम्** (எவருக்கு யாவும் ஶரீரமோ) **यस्सर्वमन्तरो यमयति** (எவர் யாவற்றுக்கு மந்தர்யாமியாயிருந்து நியமனஞ் செய்கின்றாரோ) என்ற அந்தர்யாமி ப்ராம்ஹணத்தின் ரஹஸ் யப்படி இதனால் உபதேசிக்கப்பட்டது. (எ-று)

(அ-கை.) ஸர்வாந்தர்யாமியாகவும் ஸர்வஶரீரியாகவும்புருஷபதவாச்யனான நாராயணன் இருந்தபோதிலும் முமுக்ஷுக்களான ஜீவர்கள் 'அமிருதத்வம்' என்றும், 'நாகம்' என்றும் 'பரமபதம்' என்றும் சொல்லப்படும் மோக்ஷவீட்டை அடைவதற்கு அவ்வித மோக்ஷவீட்டுக்குப் பதியான மற்றொருவனை ஆஶ்ரயிக்க வேண்டுமோ என்ற ஸந்தேஹத்தை उतामृतत्वस्येशानः என்ற வாக்யம் போக்குகின்றது—

(ப—ரை) (सः=அந்த நாராயணன்) उत=மேலும் अमृतत्वस्य=மோக்ஷநிலைக்கும் ईशानः=ஸ்வாமியாகிறார். (எ-று)

(க—ரை) ஸர்வஜகத்ஶரீரியாயும் ஸர்வஜகத் அந்தர்யாமியாயுமிருப்பவரே மோக்ஷத்துக்கும் ஸ்வாமியாகிறார் என்று கூறினதால் இவரது தியானத்தாலேயே 'நாகம், பரமபதம், அமிருதத்வம்' என்று வழங்கப்படும் மோக்ஷநிலையைப் புருஷனடைகிறான் என்றேற்பட்டது. (எ-று)

(அ—கை) புருஷபதத்தின் பொருளான நாராயணன் ஸர்வாந்தர்யாமியாயும், மோக்ஷத்துக்குப் பதியாயுமிருப்பினும் ஸிருஷ்டிகர்த்தாவானவர் மற்றொருவராக விருக்கலாம் என்ற சங்கையை यदन्नेनातिरोहति என்ற வாக்யம் போக்குகிறது-

(ப—ரை) यत्=யாதுகாரணம்பற்றி अन्नेन= பிராணிகளின் கர்மத்தை நிமித்தமாகக்கொண்டு (सः=அந்த நாராயணன்) अतिरोहति=தனது காரணாவஸ்தையைவிட்டு ஜகத்தின்நிலையை (காரியாவஸ்தையை) அடைகிறாரோ (तस्मात्स एव स्रष्टा= ஆனது பற்றி அவரே உலகைப் படைப்பவர்) (எ று)

(க—ரை) நாராயணனே காரணாவஸ்தையை விட்டுக்காரியாவஸ்தையை அடைகிறார் என்றதால் ஸிருஷ்டி கர்த்தாவும் அவர்தான் என்று உபதேசிக்கப்பட்டதாய் ஏற்பட்டது. இதிலிருந்து ப்ரபஞ்ச ஸிருஷ்டிகாலத்தில் ப்ராணிகளைச் சுகிகளா

கவோ அல்லது துக்கிகளாகவோ ஒரே விதமாகப் படைக்காமல் பற்பல விதமாய் ஸிருஷ்டித்ததிலிருந்து அவருக்கு வைஷம்யமும், கஷ்டப்படும் பிராணிகளிடத்தில் தயையில்லாததால் நைர்க்ருண்யமும் ஏற்படலாம். அந்தத் தோஷம் अन्नातिरोहति (கர்மஸாபேக்ஷனாய் ஸிருஷ்டிக்கிறார்) என்றதால்விலக்கப்பட்டதாயறியவேண்டும். सहस्रशीर्षा என்ற முதல் மந்திரத்தால் ப்ரபஞ்சஸ்திதி என்ற ரக்ஷணம் அவரது காரியமென்றும், अन्नातिरोहति என்றதால் ப்ரபஞ்ச ஸிருஷ்டி என்ற காரியமும் அவருடையதுதான் என்றும் உபதேசிக்கப்பட்டது. अमृतत्वस्येशानः (தன்னைப்பஜிப்பவர்க்குப் பிறப்பு இறப்பு இவற்றுக்குக்காரணமான பாபங்களைப்போக்கிமோக்ஷத்தைக்கொடுப்பவர்) என்றதால் அனுக்கிரஹம் என்ற பகவத ஸாதாரண குணவிசேஷம் உபதேசிக்கப்பட்டது. (எ-று.)

(அ·கை) இரண்டாவது மந்திரத்தால் காரணாவஸ்தையினின்றும் காரியாவஸ்தையை அடைகிறார் என்று கூறினதால் காரணமான மண்ணுருண்டையானது காரியாவஸ்தையான கடரூபத்தை யடைந்த பிறகு காரணமானவஸ்துவே தனிமையிலில்லாமற் போவது போல காரியமான ப்ரபஞ்சத்தை விடக் காரணமான பரமாத்மஸ்வரூபமும் தனிமையில் இல்லாததோ என்றும், ஸ்தூலப்ரபஞ்சாவஸ்தையையடைகிறார் என்றதால் ஸுகதுக்க ப்ராப்தியும் அவருக்கு உண்டாகலாமோ என்றும் சங்கை யுண்டாகலாம். அவ்வித சங்கையானது பின் வரும் மந்திரத்தால் போக்கப்படுகிறது.—

**एतावानस्य महिमा । अतो ज्यायाँश्च पूरुषः ।**
**पादोऽस्य विश्वा भूतानि । त्रिपादस्यामृतं दिवि ॥३॥**

(ப·ரை) एतावान्=(மூன்று காலத்திலுமுள்ள ஜகத்தானது எவ்வளவு உண்டோ) அவை யாவும் अस्य=இவருடைய

(நாராயணனுடைய) महिमा=ஸாமர்த்யவிசேஷமே. पूरुषः= நாராயணனேயெனில் अतः=இந்தக்காரிய ஜகத்தைக் காட்டிலும் ज्यायान्=உண்மையில் மேலானவர். (அதாவது காரிய ப்ரபஞ்ச ஸம்பந்தமற்றவர்.) (எ—று.)

(க—ரை) காரணாவஸ்தையை யடைந்த ஸூக்ஷ்ம சிதசித் ப்ரபஞ்சஶரீரியான பரமபுருஷன் ஸ்தூலசிதசித் ப்ரபஞ்சாவஸ்தையை யடைந்தபோதிலும் உண்மையில்அவரது ஸ்வரூப ஸ்வபாவத்தைப் பார்க்குங்கால் संभोगप्राप्तिरितिचेन्न वैशेष्यात् (ஜீவனுக்குள்ள ஸுகதுக்கானுபவம் ஈஶ்வரனுக்கு வருமோ வென்றால் அது வராது. ஏனெனில் ப்ரபஞ்சத்துடனிருந்தாலும் அதோடு ஒட்டாத விசேஷத்தன்மை அவரிடமிருத்தலே அதன் காரணமாகும்) என்ற நியாயப்படி ஜீவர்களுக்கு அவித்யை கர்மம் இவை காரணமாய் ப்ரபஞ்ச ஸம்பந்தமிருப்பது போல பரமபுருஷனுக்கும் அவித்யா கர்மமூலமான ப்ரபஞ்ச ஸம்பந்த மில்லாததால் . அதன்மூலமாக எவ்வித ஸுகாத்யனுபவமும் அவருக்குக் கிடையாதென்று மந்திரத்தின் முற்பாதியால் உபதேசிக்கப்பட்டது. (எ-று.)

(அ—கை.) அவ்விதமாயினும் ப்ரபஞ்சத்தை விடத் தனிமையான ஓரிடமோ அல்லது ஸ்வரூபமோ அவருக்குக் கிடையாதோ என்ற சங்கையானது பிற்பாதியால் விலக்கப் படுகிறது—

(ப—ரை.) विश्वा = எல்லா (முக்காலத்திலுமுள்ள) भूतानि = (உற்பத்தியை யடைகிற) பிராணி ஸமூஹங்களும் अस्य = இந்தப் பரமபுருஷனுடைய पादः = நாலிலொரு பங்கானதே (அதாவது அம்சமே.) अस्य = இவருடைய त्रिपात् = (மிகுதியான) மூன்று பங்கான ரூபமானது अमृतं (सत्) = விநாசமற்றதா யிருந்துகொண்டு दिवि =

ஸ்வப்ரகாச (சுத்த சத்வ வடிவமான) வைகுண்டத்தில் (वर्तते = நிலைத்து நிற்கிறது.) (எ—று.)

(க—ரை.) சித் அசித் ரூபமான சகல ப்ரபஞ்சமும் அவரது அம்சமென்றும் அவர் அம்சி என்றும், காரியாவஸ் தையையடைந்த மிருத்பிண்ட திருஷ்டாந்தம் இங்கு பொருந் தாதென்றும் மிருத் பிண்டத்தைக் காரணமாகச் சொல்லு கின்றோமே யொழிய கேவல மிருத்தைக் காரணமாகச் சொல்லுவதில்லை என்றும், கொள்ளவேண்டும். சாந்தோக் யத்தில் यथा एकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातं स्यात् = என்ற தால், பிண்டாவஸ்தையை யடைந்த மிருத்தையே காரண மென்று சொல்லலாமே யொழிய தனியான மிருத்தைக் காரணமாகச் சொல்லுதல் கூடாதென்றும், கேவல மிருத்தா னது காரணமாக ஆகவேண்டுமானால் ஜலம் முதலியவைகளு டன் சேர்ந்த பிறகே காரணமாகின்றதென்றும், ஜலாதிகளின் சேர்க்கை இல்லாமலும் தனிமிருத்து இருக்கக்கூடுமென்றும் அவ்விதமே பரமபுருஷனும் கர்ம வாஸனைகளுடன் பிரளயத் தில் பிரகிருதியில் லயமடைந்த ஜீவராசிகளுடன் கூடின சூக்ஷ்ம சித் அசித் அந்தர்யாமியாகும் நிலையில் காரணத்தன் மையையடைந்த போதிலும், ஜீவர்களுடைய கர்மவாசனைகளு க்குரிய சுகதுக்கானுபவ ரூபமான போகாதிகளைத் தரவேண் டியே சூக்ஷ்மசித் அசித் விசிஷ்டனாயிருந்து அதை ஸ்தூல மாக்கி (சிருஷ்டித்து) பிண்டம் குடம் முதலிய எந்த நிலை யிலும் கேவல மிருத்தானது காரியத்தை விட்டகலாதிருப் பது போல பரமபுருஷனும் அந்தர்யாமியா யிருக்கிறாரென் றும் உபதேசித்தபடியே இந்த மந்திரத்திலும் உபதேசித்து கேவலமிருத்தின் திருஷ்டாந்தம் வாயிலாக ப்ராகிருத ப்ர பஞ்சத்தை விட மேலான அப்பிராகிருதமான பரமபதத்தில் அவரது ஸ்வரூபமானது அப்ராகிருத சுத்த சத்வாத்மக

மான திவ்யமங்கள விக்ரஹத்துடன் வசிக்கின்றதென்றும் அவரது உபாசனையே அவ்வித பரமபதத்தைத் தருமென்றும் இதனால் உபதேசிக்கப்பட்டதா யேற்பட்டது, (எ—று.)

(அ—கை.) மூன்றாவது மந்திரத்தால் உபதேசிக்கப்பட்ட பகவத்ஸ்வரூபத்தை அநுவாதம் செய்து அவரிடமிருந்துண்டான ஜகத்தின் ஸிருஷ்டிக்கிரமமானது முறையே உபதேசிக்கப்படுகிறது—

त्रिपादूर्ध्व उदैत्पुरुषः । पादोऽस्येहाऽऽभवात्पुनः ।
ततो विष्वङ्व्यक्रामत् । साशनानशने अभि ॥ ४ ॥

(ப—ரை.) (यः=யாதொரு) त्रिपात्=பரிச்சின்ன ப்ரபஞ்சத்தை விட வியாபகரூபமுள்ள पुरुषः = புருஷ (நாராயண)ன் ऊर्ध्वं = (பிரகிருதி காரியமான ப்ரபஞ்சத்துக்கு) மேலே उदैत् = விலகி நின்றாரோ (ப்ராகிருத குண தோஷமற்றிருந்தாரோ) अस्य = இவருடைய पादः = அம்சமானது इह = ப்ரகிருதியில் पुनः = (ஸிருஷ்டி ஸம்ஹாரத்துக்கு வேண்டி) அடிக்கடி आभवात् = வருகின்றது ततः = ப்ரகிருதியில் வந்த பிறகு साशनानशने अभि—साशन = போஜனாதி வியவஹாரத்துடன் கூடின சேதனமாயும் अनशन = போஜனாதி வியவஹாரமற்ற அசேதனமாயுமுள்ள ஸ்வரூபங்களை अभि = அடைந்து विष्वङ् = தேவர் திரியக் முதலிய பல வடிவமாக व्यक्रामत् = மிகவும் வியாபித்து நிற்கின்றது. (எ—று.)

(க—ரை.) பரமபத நாயகனான நாராயணன், காரணபாவாபன்ன ப்ரகிருதியின் அந்தர்யாமியாயிருந்து சேதனாசேதனாத்மகமான எல்லா ப்ரபஞ்சத்தையும் ஸிருஷ்டித்து ஸிருஷ்டிக்கப்பட்ட அந்த ப்ரபஞ்சத்திலும் அந்தர்யாமியாகவே எங்கும் வியாபித்து ப்ரகாசிக்கிறார். என்று இந்த நான்காவது மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது. (எ—று.)

(அ—கை) ப்ரம்ஹாண்ட தேஹியான ஹிரண்ய கர்ப்ப ஸிருஷ்டி வரையுள்ள அத்வாரகமான பகவத் ஸிருஷ்டியை உபதேசித்து தன்னால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஹிரண்ய கர்ப்பர் மூலமாக ஸிருஷ்டிக்கப்படும் ஸத்வாரகமான சகல ப்ரபஞ்ச ஸிருஷ்டியையும் உபதேசிக்கத் தொடங்கி இந்த மந்திரத்தால் ஹிரண்யகர்ப்ப ஸிருஷ்டியும் அவர் மூலமாக செய்யப்படும் ஸிருஷ்டியில் சிலவுமுபதேசிக்கப்படுகின்றன.

**तस्माद्विराडजायत । विराजो अधिपूरुषः ।**
**स जातो अत्यरिच्यत । पश्चाद्भूमिमथो पुरः ॥ ५ ॥**

(ப—ரை.) **तस्मात्** = அந்த (நாராயணனிடமிருந்து) **विराट्** = ப்ரம்ஹாண்டத்தைத் தேஹமாகவுடைய) ஹிரண்ய கர்ப்பர் **अजायत** = உண்டானர் **पूरुषः**=(விராட்தேஹத்தை ஸிருஷ்டித்த) ஆதிபுருஷன் **विराजः**=ப்ரம்ஹாண்ட தேஹிக்கு **अधि** = மேலானவரே. இதற்குப்பிறகு ஹிரண்யகர்ப்பர் மூலமாயேற்படும் ஜகத்தின் ஸிருஷ்டிக்கிரமம் உபதேசிக்கப் படுகின்றது. **जातः**=உண்டான **सः**=அந்த விராட்புருஷன் **अत्यरिच्यत** = (தேவர் திரியக்மனுஷ்யாதி ரூபமாக) அதிகம் பரவி நின்றார். **पश्चात्** = தேவாதி ஸிருஷ்டிக்குப் பிறகு **भूमिम्** பூமியை (**ससर्ज** = ஸிருஷ்டித்தார்.) **अथो** = பூமி ஸிருஷ்டிக்குப் பிறகு **पुरः** = அந்த ஜீவர்களுக்கு ஸப்த தாது மயமான சரீரங்களை (**ससर्ज** ஸிருஷ்டித்தார்.) (எ—று.)

(க—ரை.) எல்லா வேதாந்தங்களாலும் வேத்யனான பரம புருஷன் தனது வசத்திலுள்ள மாயையால் விராட் தேஹமான ப்ரம்ஹாண்டத்தையும் ப்ரம்ஹாண்ட சரீரியான ஹிரண்ய கர்ப்பரையும் ஸிருஷ்டித்து ப்ரம்ஹாண்டாபிமானி தேவதாந்தர்யாமி யாகவும் ஆனார். இந்தப் பிரகாரமே

स एष भूतानीन्द्रियाणि विराजं देवताः कोशांश्च सृष्ट्वा प्रविश्यामूढो मूढ इव व्यवहरन्नास्ते माययैव = (ஸர்வோபநிஷத் ப்ரஸித்தனை இந்தப் பரம புருஷன் பூதங்களையும், இந்திரியங்களையும், விராட்டையும், தேவதைகளையும், கோசங்களையும் ஸ்ருஷ்டித்து தானே அதில் ப்ரவேசித்து உண்மையில் மூடனாக இல்லாதவனாயினும் மூடன் போலும், சேதனா சேதனரூபமான ப்ரபஞ்ச நியமனம் என்ற வியவஹாரத்தைச் செய்து கொண்டு விளங்குகிறான்) என்று உத்தர தாபனீயோபநிஷத்திலும் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே பரம புருஷன் ஹிரண்யகர்ப்பாதி அந்தர்யாமியாக விருந்து ஹிரண்யகர்ப்பன் வாயிலாக பூமி முதலியவற்றையும் ஜீவ போக்கியமான சரீராதிகளையும் ஸ்ருஷ்டித்தார் என்று இந்த மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது. (எ—று,)

(அ—கை.) ஐந்தாவது மந்திரத்தில் சொன்னபடி தேவசரீரங்கள் உண்டானதும் அந்தத் தேவர்கள் பிறகுள்ள ஸ்ருஷ்டி ஸித்திக்க வேண்டி அவ்வித ஸ்ருஷ்டிக்குச் சாதனமான பகவத்தியான ரூபமான யஞ்ஞத்தைச் செய்தனர் என்று இந்த மந்திரத்தால் உபதேசிக்கப்படுகிறது.

**यत्पुरुषेण हविषा। देवा यज्ञमतन्वत।**
**वसन्तो अस्यासीदाज्यम्। ग्रीष्म इध्मश्शरद्धविः॥ ६॥**

(ப—ரை.) देवाः = ப்ரஜாபதி ப்ராணேந்திரிய ரூபர்களான தேவர்கள் पुरुषेण = புருஷ ரூபமான हविषा=ஹவிஸ்ஸினால் यत्=யாதொரு यज्ञम्=(மானஸ) யஞ்ஞத்தை (த்யானத்தை) अतन्वत = செய்தனரோ अस्य = இந்தத்தியான ரூபமான யக்ஞத்துக்கு वसन्तः = வஸந்த ருதுவானது आज्यम् = நெய்யாக आसीत् = ஆயிற்று ग्रीष्मः = கிரீஷ்மருதுவானது इध्मः = ஸமித்தாகவும் शरत् = சரத்ருதுவானது हविः = புரோடாசாதி ஹவிஸ்ஸாகவும் (आसीत् = ஆயிற்று) (எ—று.)

(க-ரை.) ஹோம ஸாதனமான நெய், ஸமித்து, ஹவிஸ் முதலிய பாஹ்ய வஸ்துக்கள் இதுவரை உண்டாகாத படியால் புருஷனையே பொதுவில் ஹவிஸ்ஸாகவும், வஸந்த ருதுவை ஆஜ்யமாகவும் கிரீஷ்ம ருதுவை சமித்தாகவும், சரத் ருதுவை புரோடாசாதி விசேஷ ஹவிஸ்ஸாகவும் மனதால் பாவித்துமானஸயாகத்தை(த்யானத்தை)செய்தனர். (எ-று.)

**सप्तास्यासन् परिधयः । त्रिस्सप्त समिधः कृताः ।**
**देवा यद्यज्ञं तन्वानाः । अबध्नन् पुरुषं पशुम् ॥ ७ ॥**

(ப-ரை.) अस्य = இந்த ஸங்கல்ப (தியான) ரூபமான யக்ஞத்துக்கு सप्त = * காயத்திரீ முதலிய ஏழு சந்தஸ்ஸுகள் परिधयः = (*) ஏழு பரிதிகளாக आसन् = ஆயின त्रिस्सप्त = [*] இருபத்தொன்றும் समिधः = ஸமித்துக்களாகவும் कृताः = செய்யப்பட்டன (தியானிக்கப்பட்டன.) देवाः = ப்ரஜாபதி ப்ராணேந்திரிய ரூபர்களான தேவர்கள் यज्ञं तन्वानाः = மானஸயஞ்ஞத்தைச் செய்கின்றவர்களாய்க் கொண்டு यत् = யாதொரு வைராஜ புருஷனுண்டோ तम् = அந்த पुरुषम् =

---

* காயத்திரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ. பங்கதீ திருஷ்டுப், ஜகதீ, என்ற ஏழு சந்தஸ்ஸுகள்.

(*) ஐஷ்டிக வேதியிலுள்ள ஆஹவநீயத்துக்கு தெற்கு மேற்கு வடக்கு திசைகளில் முறையே ஒவ்வொரு பரிதி வீதம் 3 பரிதியும், உத்தர வேதியிலுள்ள ஆஹவநீயத்துக்கும் முற்கூறிய படி 3 பரிதியும், கூறப்பட்டிருக்கிறது. இரண்டு ஆஹவனீயத்துக்கும் கிழக்கு திசையில் ஸூரியன் 7 வது பரிதியாகிறான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது- ஆகவே பரிதி ஏழாகிறது. ஸூரியனை ஏழாவது சமித்தாகவும் கூறப்பட்டிருக்கிறது.

[*] 12 மாதங்கள், 5. ருதுக்கள், 3 லோகங்கள், 1 ஸூரியன் ஆகிய இருபத்தொன்றும்.

புருஷனை पशुम् = பசுவாக अबध्नन् = கட்டினர் (வைராஜ புருஷனையே பசுவாகத் தியானித்தனர்.) (எ—று.)

**तं यज्ञं बर्हिषि प्रौक्षन् । पुरुषं जातमग्रतः ।**
**तेन देवा अयजन्त । साध्या ऋषयश्च ये ॥ ८ ॥**

(ப—ரை.) यज्ञम् = (மானஸ) யாக ஸாதனமானவரும் अग्रतः=எல்லா சிருஷ்டிக்கு முன்பு जातम्=புருஷரூபமாயுண்டான வரும் तम्=பசுவாகப்பாவித்து யூபத்தில் கட்டப்பட்டவருமான அந்தப்புருஷனை बर्हिषि = மானஸயாகத்தில் प्रौक्षन् = புரோக்ஷித்தார்கள். साध्याः = சிருஷ்டிக்குச் சாதன மானவர்களும் ऋषयश्च = மந்திரத்ரஷ்டாக்களுமான ये देवाः = யாதொரு தேவர்களுண்டோ (ते = அவர்கள்) तेन = அந்தப் புருஷ பசுவினால் अयजन्त = யாகத்தை (தியானத்தைச்) செய்து முடித்தனர். (எ—று.)

**तस्माद्यज्ञात्सर्वहुतः । संभृतं पृषदाज्यम् ।**
**पशूँस्ताँश्चक्रे वायव्यान् । आरण्यान् ग्राम्याश्च ये ॥९॥**

(ப—ரை.) सर्वहुतः = சர்வாத்மாவான புருஷனை ஹோம த்ரவ்யமாகவுடைய तस्मात्=அந்த यज्ञात्=மானஸயாகத்தினின்றும் पृषदाज्यम् = தயிர் நெய் முதலிய போக்கிய வஸ்து ஸமூகமானது संभृतम् = சம்பாதிக்க (சிருஷ்டிக்க)ப்பட்டது; वायव्यान्=வாயுதேவதாகங்களும் तान्=உலகப்பிரசித்தங்களும் आरण्यान् = காட்டிலுள்ள வைகளுமான पशूंश्च = பசுக்களையும் ग्राम्याः = கிராமத்திலுள்ள வைகளான ये = எந்தப் பசுக்களுண்டோ तांश्च=அவைகளையும் चक्रे=உண்டுபண்ணினர். (எ-று.

(க—ரை.) சிருஷ்டிக்குச் சாதனமானவர்களும் விராட் ப்ராணேந்திரிய ரூபர்களுமான தேவர்கள் விராட் அந்தர்

யாமியும், புருஷ பதத்தால் கூறப்படுபவருமான ஸ்ரீமந் நாராயணனைத் தியானம் செய்து அதன் மூலமாக ஸ்ருஷ்டி சாமர்த்தியத்தை யடைந்து பகவந்நியம்ய மான விராட் சரீரத்தினின்றும் பின்னுள்ள வற்றை ஸ்ருஷ்டித்தனர் என்று இதனால் உபதேசிக்கப்பட்டது. இந்த மந்திரம் முதல் கூறப்படும் ஸ்ருஷ்டிகள் பகவந்நியம்யமான விராட் தேஹத்தினின்று முண்டாவதாகக் கூறப்படினும் ஸர்வநியந்தாவான பகவானே தன்னால் நியம்யமான விராட் தேகம் வாயிலாக எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தார் என்றும், இவைகளால் (*) ஸத்வாரக ஸ்ருஷ்டி கூறப்பட்டிருப்பதாக வும் கொள்ளல் வேண்டும். (எ-று.)

**तस्माद्यज्ञात्सर्वहुत: । ऋचस्सामानि जज्ञिरे ।**
**छन्दाꣳसि जज्ञिरे तस्मात् । यजुस्तस्मादजायत ॥ १० ॥**

(ப-ரை.) सर्वहुत: = ஸர்வாத்மக புருஷனை ஹோமத் திரவியமாகவுடைய तस्मात् = அந்த यज्ञात् = யாக (மானஸத் யான)த்தினின்றும் ऋच:=ருக்குகளும் सामानि=ஸாமங்களும் जज्ञिरे = உண்டாயின. तस्मात् = அந்த யாகத்தினின்றும் छन्दाꣳसि = காயத்திரீ முதலிய சந்தஸ்ஸுகள் जज्ञिरे = உண்டாயின तस्मात् = அந்த யாகத்தினின்றும் यजु: = யஜுர் வேதமானது अजायत = உண்டாயிற்று. (எ-று.)

**तस्मादश्वा अजायन्त । ये के चोभया दत: ।**
**गावो ह जज्ञिरे तस्मात् । तस्माज्जाता अजावय: ॥ ११ ॥**

---

(*) ஹிரண்ய கர்ப்பனைக் கொண்டு செய்யப்படும் ஸ்ருஷ்டி ஸத்வாரகம் என்றும், தானே ஸ்ருஷ்டிப்பது அத்வாரகம் என்றும் கூறப்படும்.

(ப—ரை.) तस्मात् = அந்த யாகத்தினின்றும் अश्वाः = குதிரைகள் अजायन्त=உண்டாயின. उभयादतः = மேற்பாகம், கீழ்ப்பாகம் இரண்டிலும் பல்லுள்ளவைகளான ये केच = யாதொரு ப்ராணிகளுண்டோ (तेच = அவைகளும்) गावो ह = பசுக்களும் तस्मात् = அந்த யாகத்தினின்றும் जज्ञिरे = உண்டாயின. तस्मात् = அந்த யாகத்தினின்றும் अजावयः = வெள்ளாடு செம்மறியாடு முதலியவைகள் जाताः = உண்டாயின. (எ—று.)

(அ—கை.) ப்ராம்ஹணர் முதலிய ஜாதி சிருஷ்டியை உபதேசிக்க வேண்டி ப்ராம்ஹவாதிகளின் கேள்வியும் அதற்குப் பதிலும் இங்கு உபதேசிக்கப்படுகிறது. அவற்றில் முதலிற் பொதுவாகவும் பிறகு விசேஷமாகவும் கேட்கப்படுகிறது.—

**यत्पुरुषं व्यदधुः । कतिधा व्यकल्पयन् ।**
**मुखं किमस्य कौ बाहू ॥ कावूरू पादावुच्येते ॥ १२॥**

(ப—ரை.) यत्=எப்பொழுது पुरुषम्=விராட் புருஷனை व्यदधुः = உண்டு பண்ணினரோ (तदा = அப்பொழுது) कतिधा=எவ்வெவ்விதமாக व्यकल्पयन् = மனதால் பாவித்து உண்டு பண்ணினர். இவ்விதம் பொதுவாகக் கேட்டுப் பிறகு விசேஷமாக (குறிப்பாக)க் கேட்கப்படுகிறது. अस्य = இந்த விராட் புருஷனுடைய मुखम् = முகமானது किम् = எது? बाहू = தோட்கள் कौ = எவை? ऊरू = தொடைகளும் पादौ = கால்களும் कौ = எவைகளாக? उच्येते சொல்லப்படுகின்றன.? (எ—று.)

(அ—கை.) இந்த மந்திரத்தில் விராட் புருஷனுடைய முகம் முதலிய அவயவங்களாக எது எது ஆயிற்று

என்ற கேள்விக்குப் பதில் சொல்லுமிடத்து ப்ராம்ஹணர் முதலியவர்கள் முகம்முதலிய அவயவங்களாகஆயினர் என்று உபதேசம் செய்யப்பட்டிருப்பினும், யஜுர் வேதம் ஏழாவது காண்டத்தில் स मुखतस्त्रिवृतं निरमिमीत.........ब्राह्मणो मनुष्याणाम् (அவர் முகத்தினின்றும் திருவிருத்ஸ்தோமத்தை சிருஷ்டித்தார் என்று தொடங்கி மனுஷ்யர்களுள் ப்ராம்ஹணனை முகத்தினின்றும் படைத்தார்) என்று தெளிவாய்க் கூறி இருப்பதாலும், சிருஷ்டிப் பிரகரண மாகையாலும் ப்ராம்ஹணர் முதலியவர்கள் முகம் முதலிய அவயவங்களினின்றும் சிருஷ்டிக்கப்பட்டனர் என்று பொருள் கொள்ள வேண்டுவது அவசியமாக ஏற்படுவதை யொட்டியே இங்கு உரை எழுதப்படுகிறது—

**ब्राह्मणोऽस्य मुखमासीत्। बाहू राजन्यः कृतः।**
**ऊरू तदस्य यद्वैश्यः। पद्भ्याꣳशूद्रो अजायत ॥ १३ ॥**

(ப—ரை.) अस्य=இந்த விராட்புருஷனுடைய मुखम् = முகமாக (முகத்தினின்றும்) ब्राह्मणः=பிராம்ஹணன் आसीत्= இருந்தான் (சிருஷ்டிக்கப்பட்டான்) राजन्यः = க்ஷத்திரியன் बाहू=தோட்களாக (தோட்களினின்றும்) कृतः=செய்யப்பட்டான். अस्य = இவனுடைய यत् = யாதொரு ऊरू = துடைகளுண்டோ तत् = அவைகளாக (அவைகளினின்றும்) वैश्यः = வைஶ்யன் (कृतः = செய்யப்பட்டான்) पद्भ्याम् = பாதங்களினின்றும் शूद्रः = சூத்திரன் अजायत = உண்டானான். (எ—று.)

(க—ரை.) இந்த மந்திரத்தை ஆழ்ந்து நோக்காது மேற்பார்வையாக நோக்குமிடத்து ப்ராம்ஹணன் என்பவன் முகமாகவும், க்ஷத்திரியன் தோட்களாகவும், வைசியன்

துடைகளாகவும் ஆயினன், பாதங்களினின்றும் சூத்திரன் உண்டானுன் என்றதிலிருந்து சிலர் ப்ராம்ஹண்யம் முதலிய ஜாதியானது பிறவியிலேற்பட்டதா? அல்லது இடையிலுண்டானதா? எனச் சங்கையை யுண்டாக்கி ப்ராம்ஹணுதிகள் முகம் முதலியவைகளாக ஆயினர் என்று மட்டும் உபதேசித்திருப்பதைக் கொண்டு ப்ராம்ஹண்யாதி ஜாதி இடையில் தொழில், குணம், இவைகளாலேயே ஏற்படுகின்றன வென்றே உறுதி கூறுகின்றனர். அதன் உண்மையை நாம் இங்கு கூறுவாம். அதாவது மனிதருள் ப்ராம்ஹணனைப் படைத்தார் என்று 7-வது காண்டத்தில் தெளிவாய்க் கூறி இருப்பதாலும் இங்கும் சிருஷ்டியைச் சொல்லி வருவதாலும் ப்ராம்ஹணனை சிருஷ்டித்தார் என்பதற்கு (सृष्टिः स्थूलीकरणम् = சிருஷ்டியானது சூக்ஷ்மமானதை ஸ்தூலமாக்குதல் என்ற பொருளைக் கொண்டு சிருஷ்டிக்கு முன்பே ப்ராம்ஹண்யத்தை யடைந்த ஜீவனை முகத்தினின்றும் ஸ்தூல சரீரத்துடன் வெளியிட்டார் என்று கருத்துக் கொள்ளவேண்டியிருப்பதால் ப்ராம்ஹணுதி ஜாதி பிறவிலேயே ஏற்பட்டதேயொழிய இடையில் ஏற்பட்டவையல்ல வென்பது தெளிவாகிறது.

சங்கை—அங்ஙனமாயின் முகத்தினின்றும் ப்ராம்ஹணனைப்படைத்தார் என்று தெளிவாகக் கூறுமல் ப்ராம்ஹணன் முகமாக இருந்தான் என்றுகூறியதின் கருத்து என்னை எனின் கூறுவாம் जीव ईशो विशुद्धा चित्तथा जीवेशयोर्भिदा। अविद्यातच्चितोर्योगः षडस्माकमनादयः। என்றபடி ஜீவன், பிரகிருதி ஈசன் இவர்கள் அநாதியாகையால் முந்தினப்ரளயத்தில் சகல ஜீவராசிகளும் तं विद्याकर्मणी समन्वारभेते पूर्वप्रज्ञा च (ஸ்தூல சரீரம் விட்டு சூக்ஷ்ம சரீரமடைந்த காலத்து அந்த ஜீவனை அவனது உபாஸனம், கர்மம், முன் வாஸனை இவைகளும்

கூடத் தொடர்ந்தே செல்லுகின்றன) என்றபடி. அடுத்த கல்பத்தில் தத்தமக்கு ஏற்படக்கூடிய சரீரம், அதன்மூலம் வரும் சுகம் துக்கம், இவைகளுக்குச் சாதனங்களான கர்மஞான வாஸனைகளுடனேயே சூக்ஷ்மாவஸ்தையை அடைந்த பகவத் சரீரத்தில் லயமடைந்திருப்பதாலும், அவ்விதம் லயமடைந்தவர்களின் கர்மாதிகளை யொட்டியே எல்லாம் வல்ல தயாமூர்த்தியான இறைவன் போகாதிகளையும், அதன் ஸாதனங்களானசரீராதிகளையும் ஜீவராசிகளிடத்து இயற்கையிலமைந்த கருணையால் படைப்பதாலும், அவ்விதம் படைப்பதாலேயே அவருக்கு வைஷம்யம், நைர்க்கிருண்யம் என்ற தோஷம் விலகுவதாலும், இந்த ருக்கில் ப்ராம்ஹணன் முகமாயிருந்தான் என்பதற்கு அடுத்த சிருஷ்டியில் ப்ராம்ஹணாதி சரீரத்துடனிருந்து கர்மஞானபலனை அனுபவிக்கத்தக்க ஜீவராசிகள் முன் ப்ரளயத்தில் விராட் புருஷனது முகம் முதலியவைகளில் லயமடைந்திருந்தனர் என்று கருத்துக்கொள்ள வேண்டும். ஆகவே ப்ராம்ஹண்யம் முதலியன இடையில் வந்ததல்ல அதன் மூலகாரணமான கர்ம ஞானாதிகளால் கடவுளால் படைக்கும் பொழுதே ஏற்படுத்தப்பட்டவை என்றும் இதனால் தெளிவுபடுத்தப்பட்டதாகவும் கொள்ளல் வேண்டும்.

மேலும் பாதங்களினின்றும் சூத்திரன் உண்டானான் (அதாவது ஸ்தூல சரீரத்தை அடைந்தான்) என இந்த வாக்கிய முடிவிலேயே தெளிவாகக் கூறியிருப்பதாலும், ஏழாவது காண்டத்திலும் மனிதருள் ப்ராம்ஹணனை முகத்தினின்றும் படைத்தார் என்றும் தெளிவாகக் கூறியிருப்பதாலும் இடையிலுள்ள கர்மஞானத்தால் ஜாதி ஏற்படவோ அல்லது மாறவோ கூடுமெனச் சொல்லுவது பொருந்தாது. அவ்விதம் சொல்லுவோமாயின் நமக்கு மிகவும் நல்லவனாகத் தோன்றின ஒருவனுக்குப் பெண்ணை மணஞ்செய்து கொடுத்த

பிறகு அவன் ஏதோ இடையில் கோபங் கொண்டு அருமையான அப்பெண்ணைப்பல்லாற் கடித்தும் காலாலுதைத்தும் தள்ளுவானேல், பல்லாற்கடிப்பது காலாலுதைப்பது என்ற வெள்ளை மூக்குக் குதிரையின் குணமும் செய்கையும் மாப்பிள்ளையினிடம் காணுவதைக் கொண்டு அவனை அச்சாதியில் சேர்த்துக் கூறவும் கூடுமோ? மேலும் கடிப்பதும் உதைப்பதுமான கழுதையின் செய்கை, குணம் இவைகள் நமது அருமைப் பசுவினிடம் காணப்படுவதைக் கொண்டு பசுவை உபயோகப்படுத்துமிடத்து மற்றதை யுபயோகபடுத்தலாமோ? ஆகவே ஜாதி என்பது பிறவியிலேற்படுவதே யொழிய இடையில் தொழில் குணம் இவைகளால் ஏற்படுவதல்ல வென்றும் இம்மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது. (எ—று.)

(அ—கை.) தயிர் நெய் முதலிய ஹோமத் திரவியங்களும் பசுமுதலிய ஜந்துக்களும், ருகாதி வேதங்களும், ப்ராம்ஹணர் முதலிய மனிதர்களும் அவரிடமிருந்து உண்டானது போலவே சந்திரன் முதலியவைகளுமுண்டாயின வென்று இதனால் உபதேசிக்கப்படுகிறது.—

**चन्द्रमा मनसो जातः । चक्षोस्सूर्यो अजायत ।**

**मुखादिन्द्रश्चाग्निश्च । प्राणाद्वायुरजायत ॥ १४ ॥**

(ப—ரை.) चन्द्रमाः=சந்திரன் मनसः=(விராட் புருஷனது) மனத்தினின்றும் जातः=உண்டானான். चक्षोः= கண்ணினின்றும் सूर्यः = சூரியன் अजायत = உண்டானான். मुखात् = முகத்தினின்றும் इन्द्रश्च = இந்திரனும் अग्निश्च = அக்கினியும் (अजायेताम् = உண்டாயினர்.) प्राणात् = பிராணனினின்றும் वायुः = வாயுவானது अजायत=உண்டாயிற்று. (எ—று)

**नाभ्या आसीदन्तरिक्षम् । शीर्ष्णो द्यौस्समवर्तत ।**
**पद्भ्यां भूमिर्दिशः श्रोत्रात् । तथा लोका ँ अकल्पयन् ॥**

(ப-ரை.) अन्तरिक्षम्=அந்தரிக்ஷலோகமானது नाभ्याः உந்தியினின்றும் आसीत् = உண்டாயிற்று. शीर्ष्णः = தலையினின்றும் द्यौः=தேவலோகமானது समवर्तत=உண்டாயிற்று पद्भ्याम् = கால்களினின்றும் भूमिः = பூலோகமானது (अजायत = உண்டாயிற்று) श्रोत्रात् = காதினின்றும் दिशः= கிழக்கு முதலிய திக்குகள் (अजायन्त = உண்டாயின) तथा= அவ்விதமே लोकान्(च)=உலகங்களையும் अकल्पयन्=உண்டாக்கினர். (எ-று.)

(அ-கை,) முற்கூறிய விராட் புருஷனுடைய த்யானமானது இந்த மந்திரத்தால் சொல்லப்படுகின்றது. அதில் மந்திரத்ரஷ்டாவானவர் தனது தியானுனுபவத்தை வெளிப்படுத்துகிறார்.—

**वेदाहमेतं पुरुषं महान्तम् । आदित्यवर्णं तमसस्तु पारे । सर्वाणि रूपाणि विचित्य धीरः । नामानि कृत्वाभिवदन् यदास्ते ॥ १६ ॥**

(ப-ரை,) यत्=யாதொரு புருஷன் सर्वाणि रूपाणि = தேவமனுஷ்யாதி எல்லாச் சரீரங்களையும் विचित्य=கர்ம மூலமாக விசேஷமாய் அடைந்தும் नामानि = இவன் தேவன், மனுஷ்யன், பசு, என்ற பெயர்களை कृत्वा= செய்து கொண்டும் अभिवदन् = அந்தந்த நாமங்களால் பல விதத்திலும் வியவஹரித்துக் கொண்டும் आस्ते=இருக்கிறாரோ तमसस्तु पारे = அக்ஞானசம்பந்தமற்றவனுயும் महान्तम् = ஸர்வ குணங்

ளாலுமதிகளுயும் आदित्यवर्णम् = சூரியன் போல பிரகாசிக்கின்றவளுயுமிருக்கிற एतम्=இந்த पुरुषम् = புருஷனே (நாராயணனே) अहम् = நான் धीरः = மனதைத் தன் வசமாக்கினனுய்க் கொண்டு वेद = தியானத்தால் எப்பொழுதும் அனுபவிக்கிறேன். (எ—று.)

धाता पुरस्ताद्यमुदाजहार। शक्रः प्रविद्वान् प्रदिशश्चतस्रः॥ तमेवं विद्वानमृत इह भवति। नान्यः पन्था अयनाय विद्यते ॥ १७ ॥

(ப—ரை.) धाता=ப்ரஜாபதியானவர் पुरस्तात्=முதலில் यम्=எந்த விராட்புருஷனே उदाजहार=(தியானம் செய்கிறவர்களின் உபகாரத்துக்காக) ப்ரகாசப்படுத்தினரோ शक्रः=இந்திரன் चतस्रः प्रदिशः = நாலு திக்குகளிலுமிருக்கிற எல்லாப் பிராணிகளேயும் प्रविद्वान् = மிகவும் நன்ருய் அறிந்து கொண்டு (उदाजहार = பிரகாசப்படுத்தினரோ) तम् = அந்த விராட் புருஷ ரூபத்தை एवम् = பிரஜாபதி இந்திரன் இவர்களின் உபதேசத்துக் கிணங்க विद्वान् = ஸாக்ஷாத்கரிக்கின்றவன் इह=இந்த ஜன்மாவிலேயே अमृतः=மரண தர்மமில்லாதவனுக भवति = ஆகிருன். अयनाय = அமிருதத்வத்தை யடைவதற்கு अन्यः = வேறு पन्थाः = வழியானது न विद्यते = கிடையாது. (எ—று.)

(க—ரை.) விராட் அந்தர்யாமியின் ஸ்வரூபத்தைக் குரூபதேசத்தை யொட்டி ஸாக்ஷாத் கரித்தவன் இதே ஜன்மத்தில் ஜராமரண மற்ற மோக்ஷ நிலையை யடைகிருன் என்றும், அந்தர்யாமி ஸாக்ஷாத்காரத்தைத் தவிர்த்து வேறு

எவ்வித கர்மாதிகளைச் செய்த போதிலும் அந்த மோக்ஷம் கிடைப்பதரிது என்றும் இதனால் உபதேசிக்கப்பட்டது.

(அ—கை,) எல்லா அநுவாகத்தின் அர்த்தமும் சுருக்கமாக இதனாலுபதேசிக்கப்படுகிறது.—

**यज्ञेन यज्ञमयजन्त देवाः। तानि धर्माणि प्रथमान्यासन् ।**

**तेह नाकं महिमानस्सचन्ते । यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः**

(ப—ரை.) **देवाः** = (பிரஜாபதி ப்ராணரூப) தேவர்கள் **यज्ञेन** = முற்கூறிய மானஸ ஸங்கற்பத்தால் **यज्ञम्** = முற்கூறிய யக்ஞரூபரான ப்ரஜாபதியை **अयजन्त** = பூஜித்த (தியானித்த)னர். **तानि**=அந்த **धर्माणि**=ஜகத்ரூபவிகாரங்களான தர்மங்கள் **प्रथमानि** = ப்ரஸித்தங்களாக **आसन्** = இருந்தன. இதுவரை சிருஷ்டியைப்பிரதிபாதிக்கும் மந்திரத்தின் அர்த்தமானது ஸங்கிரஹமாய் உபதேசிக்கப்பட்டது. இனி உபாஸனை அதன் பலன் இவைகளைக்கூறும் மந்திரத்தின் அர்த்தம் சுருக்கமாகக் கூறப்படுகிறது. **यत्र** = எந்த விராட் ப்ராப்திரூபமான பரம பதத்தில் **पूर्वे** = முன்னுள்ள **साध्याः** = விராடுபாஸ்தியைச் சாதித்தவர்களான **देवाः** = தேவர்கள் **सन्ति** = இருக்கின்றனரோ **नाकम्** = துக்கமற்ற பரமபதத்தை **ते** = அந்த **महिमानः** = விராட் உபாஸகர்களான மஹாத்மாக்கள் **सचन्ते** = அடைகின்றனர். (எ—று.)

மொத்தம் 18 ருக்குகள்.

**पुरुषसूक्तं संपूर्णम्. ॥**

புருஷஸூக்தம் முற்றிற்று.

---

अथोत्तरनारायणानुवाकः ॥

अद्भ्यस्संभूतः पृथिव्यै रसाच्च । विश्वकर्मणस्समवर्तताधि।
तस्य त्वष्टा विदधद्रूपमेति। तत्पुरुषस्य विश्वमाजानमग्रे ॥

(ப-வை.) (यः=யாதொரு விராட் புருஷன்) विश्वकर्मणः=ஜகத் கர்த்தாவான நாராயணனிடமிருந்து अधि=அதிகமாக (எல்லாவற்றுக்கும்) முதலில் समवर्तत = உண்டாயினனோ (सः=அவன்) अद्भ्यः=ஜலங்களினின்றும் पृथिव्यै = பூமியினுடைய रसाच्च ஸாராம்சத்தினின்றும் संभूतः = அண்டரூபமான ஸ்தூல சரீரத்தை யடைந்தான். त्वष्टा = ஜகத் கர்த்தாவான நாராயணன் तस्य = அந்த அண்டாபிமானி புருஷனுக்கு रूपम् = பதினன்குலோக ரூபமான அவயவ விசேஷத்தை विदधत् = செய்கின்றவராக एति = பிரவிருத்தித்தார். पुरुषस्य = விராட் புருஷனுடையதான तत् = அந்த विश्वम् = தேவ மனுஷ்யாதி ரூபமான சகல ஜகத்தும் अग्रे = (தனித்தனியே உண்டாவதற்கு) முன் आजानम् = (சமஷ்டி ரூபமாக) உண்டாயிற்று. (எ—று.)

(க—வை.) ஸர்வப்ரபஞ்ச காரணபூதனான நாராயணன் ப்ரபஞ்சத்தை ஸிருஷ்டிக்கத் தொடங்கி முறையே ஆகாசம் முதலிய பஞ்சபூதங்களைச் ஸிருஷ்டித்துப் பிறகு அதினின்றும் ப்ரம்ஹாண்டத்தை யுண்டுபண்ணி அதில் ப்ரஹாண்டாபிமானியான விராட்புருஷனை ப்ரவேசம் செய்வித்து அந்தர்யாமியாய்த் தானும் அதில் பிரவேசித்து அந்த ப்ரம்ஹாண்டத்தினின்றும் அதன் அவயவங்களான பதினன்கு லோகங்களையும், அந்தந்த லோகங்களில் தத்தமது கர்மபலனையனுபவிக்கத்தக்க தேவர் மனுஷ்யர் முதலிய எண்

பத்துநான்குலக்ஷம் ஜீவராசிகளையும் ஸிருஷ்டித்தார் என்று இந்த மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது (எ-று.)

**वेदाहमेतं पुरुषं महान्तम् । आदित्यवर्णं तमसः परस्तात् । तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था विद्यतेऽयनाय ॥ २ ॥**

சென்ற அனுவாகத்திற் படிக்கப்பட்ட 16-வது ருக்குப் படி அர்த்தம் கண்டு கொள்ளுக.

(தா-ம்.) ப்ரம்மாண்டந் தொடங்கி நமது சரீரம் வரையுள்ள ஸகல ஜகத்தையும் ஸிருஷ்டித்தவனும், அப்ராகிருத சுத்த சத்வ வடிவமுள்ளவனுமான ஸ்ரீமந் நாராயணனுடைய உபாஸனாத்மக தியானத்தாலன்றி மோக்ஷமடைவதற்கு வேறுவழி யில்லை என்று இம்மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டது. (எ-று.)

**प्रजापतिश्चरति गर्भे अन्तः । अजायमानो बहुधा विजायते । तस्य धीराः परिजानन्ति योनिम् । मरीचीनां पदमिच्छन्ति वेधसः ॥ ३ ॥**

(ப-ரை.) **प्रजापतिः** = ஸர்வப்பிரபஞ்ச காரணபூதனை நாராயணன் **अन्तर्गर्भे**=(ப்ரம்ஹாண்டத்தின்) நடுவில் **चरति**=(திவ்ய மங்களவிக்கிரஹத்துடன்) ஸஞ்சரிக்கிறார். (**सः**=அவர்) **अजायमानः**=உண்மையில் ஜனனமற்றவரா யிருந்த போதிலும் **बहुधा**=பல விதமாய் **विजायते**=யாவரு மறியுமாறு அவதரிக்கிறார். **तस्य** = ஸர்வாவதாரியான நாராயணனுடைய **योनिम्**=ஸ்வரூபத்தை **धीराः**=மனதைத்தன்வசமாக்கின மஹான்கள் **परिजानन्ति**=நன்கு அறிகின்றனர். **वेधसः**=ஸிருஷ்டி கர்த்

தர்கள் (तमेव=அவனையே उपास्य=உபாஸித்து) मरीचीनां= மரீசி, அத்ரி முதலிய மஹருஷிகளுடைய पदम्=ஸ்தானத்தை इच्छन्ति=விரும்புகின்றனர், (எ—று.)

(க—ரை.) ஆதிகர்த்தாவான நாராயணன் உண்மையில் ஜனன தர்மமற்றவராயினும் தனது ஆக்ஞா ரூப வேதத்தால் வெளியிடப்பட்ட தர்மத்தை நிலைநாட்ட வேண்டியும், அதர்மத்தைப் போக்க வேண்டியும், தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட உலகில் அந்தந்த காலத்துக் கேற்றவாறு அப்ராகிருத திவ்ய மங்கள விக்கிரஹத்துடன் அவதரிக்கின்றார் என்றும், இடையிலுள்ள ஸிருஷ்டிகர்த்தர்கள் யாவரும் அவரது தியானத்தாலேயே சிருஷ்டி ஸாமர்த்யத்தை யடைகின்றனர் என்றும் இம்மந்திரத்தால் உபதேசிக்கப் பட்டது. (எ—று.)

**यो देवेभ्य आतपति । यो देवानां पुरोहितः ।**
**पूर्वो यो देवेभ्यो जातः । नमो रुचाय ब्राह्मये । ॥ ४ ॥**

(ப—ரை.) यः=எந்த நாராயணன் देवेभ्यः=தேவர்களின் காரியத்தை ஸாதிக்கவேண்டி, आतपति=(அந்தந்த ஸமயத்தில்) காலாபக்கங்களிலும் ஆவிர்ப்பவிக்கின்றாரோ (किञ्च=மேலும்) यः=எவர் देवानाम्=தேவர்களுடைய पुरोहितः=புரோஹிதரான பிருஹஸ்பதி வடிவமாயிருக்கின்றாரோ यः=எவர் देवेभ्यः= தேவர்களைக்காட்டிலும் पूर्वः=முதலிலுண்டான ஹிரண்ய கர்ப்பர் வடிவமாய் जातः=ஆவிர்ப்பவித்தாரோ रुचाय=ஸ்வப் பிரகாசராயும் ब्राह्मये=வேதத்தால் பிரதிபாதிக்கப்படுகின்றவ ராயு மிருக்கிற तस्मै=அந்த நாராயணனுக்கு नमः=நமஸ்கார மானது (अस्तु=இருக்கட்டும்). (எ—று.)

(க—ரை.) ப்ரபஞ்சகர்த்தாவான நாராயணன் தேவ காரியத்தைச் சாதிக்க வேண்டி பலசமயங்களில் (ராமகிருஷ்ணுதி ரூபமாய்) அவதரிக்கிறுரென்றும், தேவ் புரோஹித ரான பிருஹஸ்பதியும் ஹிரண்ய கர்ப்பரும் இவரது விபூதி யென்றும் உபதேசித்து நமஸ்கார மாத்திரத்தால் பரிபூரணு னுக்கிரஹஞ் செய்கிறுரென்றும் இதனுல் கூறப்பட்டது.

रुचं ब्राह्मं जनयन्त:। देवा अग्रे तदब्रुवन्।
यस्त्वैवं ब्राह्मणो विद्यात्। तस्य देवा असन्वशे ॥५॥

(ப—ரை) देवा:=தேவர்கள்अग्रे=ஸிருஷ்டியின் முதலில் ब्राह्मम्=பரப்ரம்ஹோபாசனத்தாலுண்டான रुचम्=காந்தியை (ஸந்தோஷக் குறியை) जनयन्त:=வெளிபிடுகின்றவர் களாய்க்கொண்டு तत्=அந்த (ப்ரம்ஹதத்துவத்தை நோக்கி) अब्रुवन्=சொல்லத் தொடங்கினர். (हेपरमात्मन्=ஓ பரம புருஷனே) ब्राह्मण:=ப்ரம்ஹோபாசனஞ் செய்கின்ற य:=எவன் त्वा=உம்மை एवम्=முன் சொன்ன விதமாக विद्यात्=அநுஸந் தானஞ் செய்வானே तस्य=அவனுடைய वशे=ஆதீனத்தில் देवा:=தேவர்கள் असन्=இருக்கின்றனர்- (எ—று)

(க—ரை.) ஜகத் ஸிருஷ்டியைச் செய்யத் தொடங்கும் காலத்தில் பரமாத்மாவை உபாஸனஞ் செய்ததால் விசேஷத் திறமை பெற்ற தேவர்கள் தங்களது அநுபவத்தை பரமாத்மாவினிடம் பின்வருமாறு தெரிவித்துக் கொண்ட னர்—"ஓ பரம புருஷனே! எவன் தங்களை சகல ஜகத்தையும் படைத்தவராகவும் ஸர்வஜகத் அந்தர்யாமியாகவும் உபாஸிக் கின்றுனே அவனுக்கு தேவர்கள் யாவரும் வசமாகின் றனர். ஆகவே தங்களது உபாஸனையின் மஹிமையைச் சொல்லவும் முடியுமோ?" (எ-று.)

**ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ। अहोरात्रे पार्श्वे। नक्षत्राणि रूपम्। अश्विनौ व्यात्तम्॥ इष्टं मनिषाण। अमुं मनिषाण। सर्वं मनिषाण॥ ६॥**

(ப—ரை) (हेपरमात्मन्=ஓ பரம புருஷனே) **ह्रीश्च**=லஜ்ஜைக்குஅபிமானி தேவதையான லஜ்ஜாதேவியும் **लक्ष्मीश्च**=ஐச்வர்யத்துக்கபிமானி தேவதையான லக்ஷ்மீதேவியும் **ते**=உம்முடைய **पत्न्यौ**=பத்னிகள் **अहोरात्रे**=பகல் இரவுகள் **पार्श्वे**=இரண்டு பக்கங்களாகின்றன **नक्षत्राणि**=ஆகாசத்திற் காணப்படும் நக்ஷத்திரங்கள் **रूपम्**=உமது சரீரமாயாகின்றன. **अश्विनौ**=அச்வினீ தேவர்கள் **व्यात्तम्**=விரிந்த முகமாயாகின்றனர். **इष्टम्**=எங்களால் விரும்பப்பட்டதை **मनिषाण**=கொடுக்க வேண்டும் **अमुम्**=உலகிற் காணப்படும் பசு முதலியவற்றை **मनिषाण**=கொடுக்க வேண்டும் **सर्वम्**=இம்மை மறுமையிலுள்ள யாவையும் **मनिषाण**=தந்தருள் புரியவேண்டும். (எ—று.)

(க—ரை.) எவன் ஹ்ரீதேவி, லக்ஷ்மீதேவி, இவர்களை பரமாத்மாவின் பத்னிகளாகவும், இரவு பகல்களை இரண்டு பக்கங்களாகவும், ஆகாயத்திற் காணப்படும் நக்ஷத்திரங்களை அவரது சரீரமாகவும், அச்வினீ தேவர்களை அவரது விரிந்த முகமாகவும் உபாஸிக்கின்றானோ அவன் பகவத் பிரசாதத்தைப்பெற்று அதனால் இம்மை மறுமைகளில் சகல க்ஷேமங்களையும் அடைகிறான் என்று இதனால் உபதேசிக்கப்பட்டது. (எ—று.)

உத்தரநாராயணனுவாகம் முற்றிற்று.



अथ महानारायणानुवाकः ॥

(அ—கை.) இந்த அநுவாகத்தில் ஹிருதய புண்டரீகத்தில் உபாஸ்யனான நாராயணனுடைய குணவிசேஷங்கள் விரிவாய் உபதேசிக்கப்படுகின்றன.—

**सहस्रशीर्षं देवं विश्वाक्षं विश्वशंभुवम् ।**
**विश्वं नारायणं देवमक्षरं परमं पदम् ॥ १ ॥**

(ப—ரை.) नारायणम्=நாராயணனை सहस्रशीर्षम्=ஆயிரக்கணக்கான (அளவு கடந்த) சிரஸ்ஸையுடையவராகவும் देवम्=ஸ்வப்பிரகாசராகவும் विश्वाक्षम्=எங்கும் கண்ணுள்ளவராகவும் विश्वशंभुवम्=சகல ஜகத்துக்கும் சுகத்தை தருகின்றவராகவும் विश्वम्=சகல ஜகத் சரீரியாகவும் देवम्=எல்லாத் தேவர்களையும் அங்கமாயுடையவராகவும் अक्षरम्=எங்கும் நிறைந்தவராகவும், அல்லது நாசமற்றவராகவும் परमम्=எல்லாவற்றுக்குங் காரண பூதராகவும் पदम्=ஆஶ்ரயிக்கத் தகுந்தவராகவும் (ध्यायेत्=தியானஞ் செய்யவேண்டும்). (எ—று.)

**विश्वतः परमान्नित्यं विश्वं नारायणँहरिम् ।**
**विश्वमेवेदं पुरुषस्तद्विश्वमुपजीवति ॥ २ ॥**

(ப—ரை.) (भगवन्तम्=பரம புருஷனை) विश्वतः=ஜடரூபமான ஜகத்தைக் காட்டிலும் परमात्(*)=மேலானவராகவும் नित्यम्=விநாசமற்றவராகவும் विश्वम्=சர்வாத்மகராகவும் नारायणम्=சகல ஜீவர்களிடமும் அந்தர்யாமியாக இருப்பவராகவும், அல்லது சகல ஜீவசமூகத்துக்கும் நியந்தாவாகவும்

---

(*) வேதமானபடியால், த்விதீயா விபக்தி வரவேண்டிய இடத்தில் பஞ்சமீ விபக்தி வந்திருப்பதாயறிய வேண்டும்.

ह्वरिम्=தன்னை உபாஸிப்பவனுடைய பாபத்தைப்போக்குகின்றவராகவும் इदम्=பிரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களால் அறியப்படுகிற (यत्) विश्वम्=யாதொரு ஜகத்உண்டோ तद्विश्वमेव= அந்த ஜகத்தையே पुरुषः=புருஷபத வாச்யனான நாராயணன் उपजीवति=ஆச்ரயிக்கிறார் என்பதாகவும் (ध्यायेत्=தியானஞ் செய்ய வேண்டும்). (எ—று.)

(க—ரை.) யாவராலும் ஆச்ரயிக்கத் தகுந்த ஸ்ரீமந்நாராயணன் தன்னை ஆச்ரயிக்கும் பிரபஞ்சத்தைத் தான் ஆச்ரயிக்கிறார் என்றதால் அவர் ஸௌலப்ய குணம் நிறைந்தவரென்றும், பரமதயா மூர்த்தியென்றும், அவருடைய உபாசனமானது சகல க்ஷேமத்தையுந் தரும் என்றும் இதனால் உபதேசிக்கப்பட்டதாயறியவும். (எ—று.)

குறிப்பு :—முதல் மந்திரத்தால் ப்ரதிபாதிக்கப்பட்ட சில குணங்களை இம்மந்திரத்திலும் திருப்பிச் சொல்லியிருப்பதற்கு பகவானை இவ்விரண்டுருக்குகளிலும் கூறப்பட்ட குணவிசேஷ விசிஷ்டனாகவே உபாஸனஞ் செய்ய வேண்டுமென்பதை வற்புறுத்துவதில் தாத்பர்யங்கொள்ள வேண்டும்.

**पतिं विश्वस्यात्मेश्वर ँ शाश्वत ँ शिवमच्युतम् ।**
**नारायणं महाज्ञेयं विश्वात्मानं परायणम् ॥ ३ ॥**

(ப—ரை.) विश्वस्य=ஜகத்துக்கு पतिम्=(பாலகனானது பற்றி)பதியாகவும் आत्मेश्वरम्=(சகல) ஜீவர்களுக்கும் நியந்தாவாகவும் शाश्वतम्=எப்பொழுதும் நிலைத்திருக்கின்றவராகவும் शिवम्=பரம மங்களரூபியாகவும் अच्युतम्=பக்தர்களைக் கைவிடாதவராகவும் नारायणम्=ஜீவசமூகத்துக்கு அந்தர்யாமியாகவும் महाज्ञेयम्=அறிய வேண்டிய தத்துவங்களுட்சிறந்த தத்துவமாகவும் विश्वात्मानम्=சேதனா சேதன ரூபமான ஜகத்தைச்

சரீரமாயுடையவராகவும் परायणम् = பரமப்பிராப்யராகவும் (ध्यायेत्=தியானஞ் செய்ய வேண்டும்). (எ—று.)

(க—ரை.) ஸ்ரீமந் நாராயணனைத் தியானஞ் செய்யும் பொழுது, சர்வஜகத் பாலகனுகவும், சர்வ ஜீவாந்தர்யாமியாகவும், எக்காலத்திலு முள்ளவராகவும், மேலான மங்களத்தைத் தருகின்றவராகவும், அறிய வேண்டிய தத்துவங்களுட் சிறந்த தத்துவமாகவும், சேதனு சேதன ரூபமான சகல ஜகத்தையும் அவரது சரீரமாகவும், அவரே பரமப் பிராப்யரென்றும் தியானஞ் செய்ய வேண்டு மென்று இதனுல் உபதேசிக்கப்பட்டது, (எ—று.)

नारायण परो ज्योतिरात्मा नारायणः परः ।
नारायण परं ब्रह्मतत्त्वं नारायणः परः ।
नारायणपरो ध्याता ध्यानं नारायणः परः ॥ ४ ॥

(ப—ரை.) नारायण= (*) சாஸ்திரங்களில் நாராயணன் என்று சொல்லப்படுகின்றவரே परः ज्योतिः=(சாந்தோக்கியத்தில் परं ज्योतिरुपसंपद्य பரஞ் ஜ்யோதிஸ்ஸை யடைந்து என்று கூறப்படும்) ஜ்யோதிஸ்ஸாகவாகிறார். (तस्मात्= ஆனதுபற்றி) नारायणः=நாராயணன் परः आत्मा=பரமாத்மா. नारायण=நாராயணனே परम्=மேலான ब्रह्मतत्त्वम्=ஸத்ய ஞானுதி வாக்யங்களினுல் கூறப்படும் ப்ரம்ஹத்தின் தத்துவமாகவாகிறார் अतः=ஆகையால் नारायणः=நாராயணன் परः= (आत्मा)=பரமாத்மாவாகவாகிறார். नारायणपरः=நாராயணனைப்

---

(*) नारायणः என்று விசர்க்கத்துடன் படிக்க வேண்டிய விடத்தில் வேதமாதலால் नारायण என்று விசர்க்கலோபத்துடன் படிக்கப்பட்டிருப்பதாய் அறிய வேண்டும்.

பரமாக எண்ணுகிற ध्याता=தியானஞ் செய்கின்றவனே (परः)=மேலானவன். नारायण:=நாராயணனே परः=மேலான ध्यानम्=தியான விஷயமானவர். (எ—று.)

(க—ரை.) ஸர்வ சாஸ்திரங்களிலும் தியானஞ் செய்ய வேண்டிய வஸ்துவைப் பொதுவாய்ச் சொன்ன விடத்தில் நாராயணனையே அவ்வித தியானஞ் செய்ய வேண்டிய வஸ்துவென்று சொல்லப்பட்டதாய் கொள்ள வேண்டு மென்றும் "परं ज्योतिरुपसंपद्य स्वेन रूपेणाऽभि निष्पद्यते" என்று சொன்னபடி முடிவில் அடைய வேண்டிய ஜ்யோதிஸ் என்ற பதத்தால் சொல்லப்படுகின்ற பரமபுருஷன் ஸ்ரீமந் நாராயணனே என்றும், நாராயணனைத் தியானஞ் செய்கின்றவனே மேலான ஜீவனென்றும், அவரே பரமப்பிராப்ய ரென்றும், அவரே மேலான தத்துவமென்றும் இந்த மந்திரத்தாலுபதேசிக்கப் பட்டது. (எ—று.)

## यच्च किञ्चिज्जगत्सर्वं दृश्यते श्रूयतेऽपि वा।
## अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायण: स्थित: ॥ ५ ॥

(ப—ரை.) सर्वम्=ஸமஸ்தமான जगत्=ஜகத்தும் यच्चकिञ्चित्=மற்றுமுள்ளஎந்த வஸ்துவும் दृश्यते=பிரத்யக்ஷாதுமானங்களால் காணப்படுகின்றதோ श्रूयतेऽपिवा=சப்தத்தாலறியப்படுகின்றதோ तत्, सर्वम्=அவையாவையும் नारायण:=நாராயணன் अन्त:=உள்ளிலும் बहिश्च=வெளியிலும் व्याप्य=நிறைந்து கொண்டு स्थित:=இருக்கிறார். (எ—று.)

(க—ரை.) ப்ரத்யக்ஷம் அனுமானம், சப்தம் முதலிய பிரமாணங்களால் அறியப்படும் சேதனு சேதன ரூபமான சகல பிரபஞ்சத்திலும் ஸ்ரீமந் நாராயணன் பாலில் நெய் போல வியாபித்திருப்பதாகத் தியானஞ் செய்ய வேண்டு மென்று இதனால் உபதேசிக்கப்பட்டது. (எ—று.)

(அ—கை.) ஆறாவது ருக்கின் முற்பாதியால் நாராயண னுடைய உண்மையான ரூபமானது சுருக்கமாக உபதேசிக் கப்படுகிறது.—

अनन्तमव्ययं कवि ँ समुद्रेऽन्तं विश्वशंभुवम् ।
पद्मकोशप्रतीकाश ँ हृदयं चाप्यधोमुखम् ॥ ६ ॥
अधोनिष्ट्या वितस्त्यान्ते नाभ्यामुपरि तिष्ठति ।
ज्वालमालाकुलं भाती विश्वस्यायतनं महत् ॥ ७ ॥

(ப—ரை.) अनन्तम्=தேச பரிச்சேத மற்றவராகவும் (எந்த தேசத்திலுமுள்ளவராகவும்) अव्ययम्=விநாசமற்றவ ராகவும் कविम्=ஸர்வக்ஞராகவும் समुद्रे=(பிரகிருதி காரிய மானதும், பிரசித்த சமுத்திரத்துக் கொப்பானதுமான) ஸம் சாரசமுத்திரத்தின் अन्तम्=(x) முடிவிலுள்ளவராகவும் विश्वशंभुवम्=ஸகல விதமான ஸாம்சாரிகசுகங்களுக்கும் காரண மாகவும் (नारायणम्=நாராயணனை ध्यायेत्=தியானஞ் செய்ய வேண்டும்.) निष्ट्याः=கழுத்தெலும்புக்கு अधः=கீழ்பாகத்தி லும் नाभ्याम्=உந்திக்கு उपरि=மேல் பாகத்திலும் वितस्त्या-न्ते=பன்னிரண்டங்குலமளவுள்ள இடத்தின் முடிவில் हृदयम्= ஹிருதயம் என்ற மாமிசபிண்டமானது पद्मकोशप्रतीकाशम्= எட்டு தளமுள்ள தாமரைப்புஷ்பத்துக் கொப்பாகவும் अधोमु-खम्=தலை கீழாகவும் तिष्ठति=இருக்கின்றது (तत्र=அந்தஹிரு தய புண்டரீகத்தின் நடுவில்) विश्वस्य=ப்ரும்மாண்டத்திற்கு

---

(x) எப்பொழுது நாராயணனை யுபாஸிக்கின்றானோ அப் பொழுதே ஜனன மரணரூபமான ஸம்சார சமுத்திரமானது வற்றி விடுமென்றுங் கருத்துக் கொள்ள வேண்டும்.

आयतनम्=ஆதாரமானதும் ज्वालमालाकुलम्=பிரகாச பரம்பரைகளுடன் கூடினதுமான महत्=பூஜிக்கத்தகுந்த பரமாத்ம வஸ்துவானது भाती=பிரகாசிக்கின்றது. (எ-று.)

(க-ரை.) உந்திக்குப் பன்னிரண்டங்குலம் மேலும் கழுத்தெலும்புக்குப் பன்னிரண்டங்குலங் கீழுமுள்ள விடத்தில் எட்டுதளமுள்ள தாமரை மொக்குக் கொப்பான ஹிருதய மென்ற மாமிச பிண்டமானது தலை கீழாகத் தொங்குவதாயும், அதையே ஹிருதய புண்டரீகம் என்று சொல்வது வழக்க மென்றும், அந்த ஹிருதயத்தின் நடுவில் அந்தக் கரணமென்ற தியானக்கருவி நியதமாய் வாசஞ் செய்வதாகவும் அந்த அந்தக் கரணத்திலேயே சர்வஜகத் காரணபூதரும், பிரகாசபரம்பரையுடன் கூடினவரும், மற்றும்சாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட குண விசேஷங்களுடன் கூடினவருமான ஸ்ரீமந்நாராயணனைத் தியானஞ் செய்தல் வேண்டு மென்றும் இந்த இரண்டு மந்திரங்களால் உபதேசிக்கப்பட்டது (எ-று.)

सन्ततꣳ शिलाभिस्तुलंबत्या कोशसन्निभम् ।
तस्यान्ते सुषिरꣳ सूक्ष्मं तस्मिन्त्सर्वं प्रतिष्ठितम् ॥ ८ ॥

(ப-ரை.) कोशसन्निभम्=தாமரை மொக்குக் கொப்பான (हृदयन्तु=ஹிருதயமோ வெனில்) शिलाभिः=நரம்புகளால் सन्ततम् (सत्)=நாலா பக்கங்களிலும் சூழப்பட்டதாய்க் கொண்டு आलंबति=சரீரத்தின் நடுவில் தொங்குகின்றது तस्य=அந்த ஹிருதயத்தினுடைய अन्ते=சமீபத்தில் सूक्ष्मम्=சூக்ஷ்மமான सुषिरम्=துவாரமானது (சுஷும்ந நாடியின் அடித்தண்டானது तिष्ठति=இருக்கின்றது.) तस्मिन्=அந்தத் துவாரத்தில் सर्वम्=எல்லா ஜகத்தும் प्रतिष्ठितम्=ஆச்ரயித்திருக்கின்றது. (எ-று.)

(க-ரை.) "शतं चैकाच हृदयस्य नाड्य: तासां मूर्धान-मभि निस्सृतैका" ஹிருதயத்தை யொட்டி நூற்றொரு நாடிகளிருக்கின்றன. அவைகளில் ஒரு நாடியானது (சுஷும்னே யானது) மூர்த்தாவை (பிரும்மரந்திரத்தை) நோக்கிச் செல்லுகின்றது என்று கடோப நிஷத்திற் சொல்லியபடியே இங்கு முபதேசித்து ‡ ஹிருதயத்தை யொட்டி யிருக்கும் நாடிகளுள் சிறந்ததான சுஷும்னு நாடியானது எங்கிருந்து பிரும்மரந்திரத்தை நோக்கிச் செல்லுகின்றதோ அந்த இடத்தில் அதாவது அங்குள்ள துவாரத்தில் மனதைச் செலுத்தி சகல ஜகத்துக்கும் ஆதாரபூதனை ஸ்ரீமந்நாராயணனைத் தியானஞ் செய்தால் அவரது பிரசாதத்தை யடையலாமென்றும் இதனல் உபதேசிக்கப்பட்டது. (எ-று.)

तस्य मध्ये महानग्निर्विश्वार्चिर्विश्वतोमुख: ।
सोऽग्रभुग्विभजन् तिष्ठन्नाहारमजर: कवि: ।
तिर्यगूर्ध्वमधश्शायी रश्मयस्तस्य सन्तता ॥ ९ ॥

(ப-ரை.) तस्य=அந்த ஸுஷும்னு நாடியினுடைய मध्ये=நடுவில் महान्=ப்ரௌடமானதாயும் विश्वार्चि:=நாலா பக்கங்களிலும் ஜ்வாலையுடன் கூடினதாயும் विश्वतोमुख:=நாலா பக்கத்திலுமுள்ள நாடிகளில் பிரகாசிக்கின்றதாயும் अग्रभुक्= உட்கொண்ட ஆஹாரத்தை முதலில் புஜிக்கின்றதாயும்

---

‡ ஹிருதய கமலத்திலுள்ள தளங்களில் இன்னின்ன தளங்களில் இன்னின்ன தேவதைதயைத் தியானஞ் செய்ய வேண்டுமென்றும் அதைச் சுற்றிலுமுள்ள நாடிகளின் சுவரூபங்களையும் சுஷும்னு நாடியின் விசேஷ லக்ஷணங்களையும், அங்குத் தியானஞ் செய்ய வேண்டிய விசேஷ முறைகளையும், மற்றும் இது சம்பந்தமான விஷயங்கள் யாவையும் "ஷட்சக்கிர நிரூபணம்" என்ற கிரந்தத்தில் கண்டு கொள்ளவும்.

आहारम्=(தான் புஜித்த) ஆஹாரத்தை विभजन्=சரீரம் முழுதும் பரவும்படிச் செய்கின்றதாயும் (स्वयम्=தான்) अजर:=ஜீர்ணமாகாததாயும்.(अत एव=ஆனது பற்றியே) कवि:=வெகு சாமார்த்தியமுள்ளதாயும் महान्=பெரிதாயுமிருக்கிற अग्नि:=வைச்வாநராக்னியானது तिष्ठन्=இருக்கின்றது. (किंच=மேலும்) तस्य=அந்த அக்னியினுடைய रश्मय:=கிரணங்கள் तिर्यगूर्ध्वमधश्शायी=குறுக்கும், மேலும், கீழும் படிந்தவைகளாகவும் सन्तता=எப்பொழுதும் தொடர்ந்திருப்பதாகவுமிருக்கின்றன. (எ—று.)

सन्तापयति स्वं देहमापादतलमस्तग: ।
तस्य मध्ये वह्निशिखा अणीयोर्ध्वा व्यवस्थित:* ॥१०॥

नीलतोयदमध्यस्था [*] द्विद्युल्लेखेव भास्वरा ।
नीवारशूकवत्तन्वी पीता भास्वत्यणूपमा ॥ ११ ॥

(ப—ரை.) (स:=அந்த அக்னியானது) आपादतलमस्तग:=உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையடைந்து स्वं देहम्=தனது தேகத்தை सन्तापयति=சூடுள்ளதாகச் செய்கின்றது तस्य=(ஜ்வாலா விசேஷத்தால் தேஹம் முழுதும் வியாபித்த) அந்த அக்னியினுடைய मध्ये=நடுவில் अणीय:=கிரம்பவும் ஸூக்ஷ்மமான (*) वह्निशिखा=நெருப்பின் ஜ்வாலையானது ऊर्ध्वा=ஸுஷும்ந நாடியின் வழியாகப் பிரும்ஹரந்திரம் வரைச்

---

"* व्यवस्थिता" इति भाष्यसंमत: पाठ: ॥ [*] "मध्यस्था विद्युल्लेखेव" इति भाष्यसंमत: पाठ: ॥

(*) சரீரத்திலுள்ள சூட்டைக் கொண்டு அந்த அக்னியை ஊஹித்தறிய வேண்டுமென்று இதனால் உபதேசிக்கப்பட்டது

செல்லுகின்றதாகவும் व्यवस्थित:=நிலைத்து நிர்க்கின்றதாகவும் नीलतोयदमध्यस्था=கருத்த மேகத்தின் நடுவிலிருக்கிற विद्युल्लेखेव=மின்னற்கொடிபோல भास्वरा=பிரகாசிக்கின்றதாகவும் नीवारशूकवत्=செந்நெல் தான்னியத்தின் ஊசிபோல तन्वी=சிறிதாகவும் पीता=வெளியிலுள்ள நெருப்புப்போல் பொன்னிறமுள்ளதாகவும் भास्वती=காந்தியுள்ளதாகவும் अणूपमा=பிரசித்தமான அணுவஸ்துவுக்கு உவமையாகச் சொல்லக் கூடியதாகவும் (अस्ति=இருக்கின்றது.) (எ—று.)

**तस्याश्शिखाया मध्ये परमात्मा व्यवस्थितः ।**

**स ब्रह्म * स शिवस्स हरिस्सेन्द्रः सोऽक्षरः परमस्स्वराट् ॥**

(ப—ரை.) तस्याः=அந்த शिखायाः=அக்கினி ஜ்வாலையினுடைய मध्ये=நடுவில் परमात्मा=ஸர்வாந்தர்யாமியான நாராயணன் व्यवस्थितः=உபாஸகர்களை அனுக்கிரஹிப்பதற்காக நிலைத்திருக்கின்றார். सः=அவரே ब्रह्म=நான்முகன் सः=அவரே शिवः=(பார்வதி பதியான) சிவன் सः=அவரே हरिः=பக்தர்களின் துக்கத்தை விலக்க வேண்டி அந்தந்த ஸமயத்தில் (ராம கிருஷ்ணாதி ரூபமாய்) அவதரிக்கின்ற விஷ்ணு सः=அவரே इन्द्रः=மூன்று லோகங்களையும் ஆளும் இந்திரன் सः=அவரே अक्षरः=உபநிஷத்துக்களில் "அக்ஷர" என்றதால் சொல்லப்படுகின்றவர். परमः=பிராகிருதமான இடத்திலிருந்தாலும் பிராகிருதவஸ்து ஸம்பந்தமற்றவர் स्वराट्=பாரதந்திரியமற்றவர். (எ—று.)

(க—ரை.) सहस्र शीर्षम् என்ற மந்திரந் தொடங்கி உபதேசிக்கப்பட்ட பரமாத்ம ரூபத்தை पद्मकोशप्रतीकाशम्

---

* "सब्रह्मा" इति भाष्यसंमतः पाठः

என்று தொடங்கி சொல்லப்பட்ட இடத்தில் தியானஞ் செய்ய வேண்டு மென்றும், அவ்விதம் தியானஞ் செய்யும் பொழுது இம்மந்திரத்தின் பிற்பாதியால் உபதேசிக்கபட்ட படியும் ஸ்ரீமந் நாராயணனைத் தியானஞ் செய்ய வேண்டு மென்றும் இதனால் உபதேசிக்கப்பட்டது. (எ—று.)

மஹாநாராயணனுவாகம் முற்றிற்று.

## श्रीविष्णुसूक्तम् ॥

**विष्णोर्नुकं वीर्याणि प्रवोचं यः पार्थिवानि विममे रजाँसि यो अस्कभायदुत्तरँसधस्थं विचक्रमाणस्त्रेधोरुगायः ॥ १ ॥**

(ப—ரை.) यः=எந்த விஷ்ணு पार्थिवानि=பூமியிலுள்ள रजांसि=பரமாணுக்களை विममे=உண்டு பண்ணினரோ, அல்லது கணக்கிட்டாரோ यः=எந்த விஷ்ணு उत्तरम्=மேலே இருக்கிற सधस्थम्=தேவர்களின் இருப்பிடமான ஸ்வர்க்க லோகத்தை अस्कभायत्=கீழ் விழாவண்ணம் நெருத்தினரோ (यः=எவர்) विचक्रमाणः=மூவ்வுலகையும் அளக்கப் போகின்றவராய் त्रेधा (पदं निदधौ=மூன்று அடிகளை வைத்தாரோ) (यः=எவர்) उरुगायः=மஹான்களால் ஸ்துதிக்கப்படுகின்றரோ (तस्य=அந்த) विष्णोः=விஷ்ணுவினுடைய वीर्याणि=சக்தியினல் செய்யப்பட்ட नुकम्=சரித்திரங்களை प्रवोचम्=சொல்லுகிறேன். (எ—று.)

**तदस्य प्रियमभिपाथो अश्याम्। नरो यत्र देवयवो मदन्ति। उरुक्रमस्य स हि बन्धुरित्था। विष्णोः पदे परमे मध्व उत्सः ॥ २ ॥**

(ப—ரை.) देवयवः=தேவர்களை யடைய விரும்புகின்ற नरः=மனிதர்கள் यत्र=எந்த கங்கையின் ஜலத்தில मदन्ति= ஸ்நானங்களைச் செய்வதன் மூலம் ஸந்தோஷமடைகிறார்களோ, अस्य=விஷ்ணுவுக்கு प्रियम=இஷ்டமான तत्=அந்த पाथः= கங்கா ஜலத்தை अभ्यश्याम=அடைவேனாக उरुक्रमस्य= அகண்ட சரணத்தையுடைய विष्णोः=விஷ்ணுவினுடைய परमे पदे=மூன்றாவது பாதத்தில் बन्धुः=ஸம்பந்தித்ததும் मध्वः=இனிப்பானதுமான सः=அந்த उत्सः=பிரவாஹமானது इत्थाहि=இத்தகைய மஹிமையுள்ளதாக விருக்கின்றது.

**प्रतद्विष्णुस्तवते वीर्याय। मृगो न भीमः कुचरो-गिरिष्ठाः। यस्योरुषु त्रिषु विक्रमणेषु। अधिक्षियन्ति भुवनानि विश्वा ॥ ३ ॥**

(ப—ரை.) कुचरः=பூமியில் சஞ்சரிக்கின்றதும், भीम.= பயங்கரமானதுமான मृगः=சிங்கமானது न=எவ்விதம் (ऊर्ध्व-मुत्प्लुत्य=மேலே தாவிக் குதித்து) गिरिष्ठाः। மலையின் மேலிருப்பதாக भवति=ஆகின்றதோ (तथा=அவ்விதமே) यस्य= எந்த விஷ்ணுவினுடைய उरुषु=அகண்டதான त्रिषु=மூன்று विक्रमणेषु=அடிகளில் विश्वा=எல்லா விதமான भुवनानि=மேலிருக்கும் லோகங்கள் अधिक्षियन्ति=மேலாக வஸிக்கின்றனவோ, तत्=அத்தகைய மஹிமை வாய்ந்த विष्णुः=மஹாவிஷ்ணுவானவர் वीर्याय=விசேஷ சக்தி லாபத்துக்காக प्रस्तवते=நன்கு என்னால் ஸ்துதிக்கப்படுகிறார் (எ—று.)

परो मात्रया तनुवा वृधान। न ते महित्वमन्वश्नुवन्ति। उभे ते विद्म रजसी पृथिव्या। विष्णो देव त्वं परमस्य वित्से ॥ ४ ॥

(ப—ரை.) मात्रया=மூவ்வுலகையும் அளக்க ஆரம்பித்த तनुवा=த்ரிவிக்ரமாவதார ரூபமான சரீரத்தினால் वृधान= விருத்தியடைகின்ற विष्णो देव=ஹே மஹா விஷ்ணோ! (त्वम्=நீர்) परः=எல்லாத் தேவர்களுக்கும் மேலாக விளங்குகிறீர். ते=உம்முடைய महित्वम्=மஹிமையை (केऽपि=எவரும்) नान्वश्नुवन्ति=அடையமாட்டார்கள் उभे=பூமி அந்தரிக்ஷம் இவைகளை पृथिव्याः=பூமியிலிருந்து (मातुं प्रवृत्तस्य= அளக்கஆரம்பித்த) ते=உம்முடைய रजसी=தூளிகளாக विद्म= அறிகின்றோம் ஹே விஷ்ணோ! நீர் மூவ்வுலகையும் அளக்க ஆரம்பித்த ஸமயத்தில் பூமி அந்தரிக்ஷம் இவைகளில் முறையே ஒவ்வொரு அடியை வைத்து அளந்தீர் அச்சமயம் பூமி அந்தரிக்ஷம் இவைகள் உமது சரணத்தில் ஒட்டிய தூசிகள் போலிருந்தன. இவ்விதம் இரண்டு அடிக்கு ஸ்தானமான இடத்தை மட்டும் நாமறிவோம் என்று கருத்து त्वं (पुनः)= நீர் தான் परमस्य=மூன்றாவது அடியினுடைய ஸ்தானத்தை वित्से=அறிவீர். (எ—று.)

विचक्रमे पृथिवीमेष एताम्। क्षेत्राय विष्णुर्मनुषे दशस्यन्। ध्रुवासो अस्य कीरयो जनासः। उरुक्षितिँसु जनिमाचकार ॥ ५ ॥

(ப—ரை.) एषः=இந்த विष्णुः=விஷ்ணு मनुषे=மனிதர்களுக்கு क्षेत्राय=தங்குவதற்கு (स्थानम=இடத்தை) दशस्यन्= கொடுக்க விருப்பங் கொண்டு एतां पृथिवीम्=இம்மூவகையும்

विचक्रमे=தனது அடிவைப் புகளினுல் வியாபித்துக் கொண்டார் (ஸ்வாதீனமாக்கிக் கொண்டார்.) अस्य=இந்த விஷ்ணுவினுடைய कीरय:=சரித்திரங்களைச் சொல்லுகின்ற जनास: ஜனங்கள் ध्रुवास:=வைகுண்டத்தில் அழிவற்ற வாஸமுள்ளவர்களாக (भवन्ति=ஆகிறுர்கள்.) सुजनिम=நல்ல அவதாரத்தை (வாமனுவதாரத்தை प्रत्त:=அடைந்த स:=அந்த விஷ்ணு) उरुक्षितिम्=ப்ராணிகள் வஸிப்பதற்காக விஸ்தீர்ணமானஸ்தானத்தை आचकार=ஸம்பாதித்தார். விஷ்ணு வாமனுவதாரம் செய்து தனது பக்தர்களான தேவர்களுக்கு ஸ்வர்க்காதிலோகங்களை ஸம்பாதித்துக் கொடுத்தார் என்று கருத்து.

त्रिर्देव: पृथिवीमेष एताम्। विचक्रमे शतर्चसं महित्वा। प्रविष्णुरस्तु तवसस्तवीयान्। त्वेषँ ह्यस्य स्थविरस्य नाम ॥ ६ ॥

(ப—ஸ.ர.) एष:=இந்த देव:=மஹா விஷ்ணு शतर्चसम्=பல விதமான மார்க்கங்களுடன் கூடின (ஜீவர்களின் கர்மகதி பல் வேறு விதமாயிருப்பதாலிவ்விதம் கூறப்பட்டது) एतां पृथिवीम=இம்மூவுலகையும் महित्वा=தனது சக்தியினுல் त्रिर्वि चक्रमे=மூன்று அடிகளால் அளந்தார். तवस:=பெரிய வஸ்துவைக் காட்டிலும் तवीयान्=பெரிய ரூபமுள்ளவரான महतो महीयान्=பெரிய வஸ்துவைக் காட்டிலும் பெரியது என்று கூறியிருப்பதால் இவ்விதம் கூறப்பட்டது. विष्णु:=விஷ்ணு தேவன் प्रास्तु=மேலாக விளங்கட்டும். स्थविरस्य=மிகவும் ப்ராசீனரான अस्य=அந்த விஷ்ணுவினுடைய नाम=த்ரிவிக்ரமாதி ரூபமான பெயரானது त्वेषं हि=மிகவும் பிரசித்தமாகவே இருக்கிறது. (எ—று)

விஷ்ணு ஸூக்தம் முற்றிற்று.

# ஸ்ரீ ஸூக்தம்

## முகவுரை

யாவராலும் உபாஸிக்கத்தகுந்தவளும், புருஷோத்தமனான நாராயணனுடைய பத்னியுமான மஹாலக்ஷ்மியின் ஸ்வரூபஸ்வபாவாதிகளையும், அவளது உபாஸனையால் ஜீவர்களுக்குண்டாகும் பல விசேஷங்களையும் உபதேசிக்கும் வேத மந்திரங்களுக்கு "ஸ்ரீ ஸூக்தம்" எனப் பெயரிடப்பட்டிருக்கிறது. "பிரபஞ்ச ஸாரம்" என்ற மந்திர சாஸ்திரத்தில் ஸ்ரீ ஸூக்த பாராயணஞ் செய்யும் பொழுது அவசியம் அநுஷ்டிக்க வேண்டியதாகச் சொல்லப்பட்டிருக்கும் சில விசேஷங்களை இங்கு எழுதுகிறோம்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் ப்ரஸாதத்தையடைய விருப்பமுள்ள ஒவ்வொரு ஜீவனும், முதலில் ஆசாரிய லக்ஷணம் பொருந்தியவரும், மந்திர சாஸ்திர தத்துவமறிந்தவரும் தேவதா பக்தியுள்ளவருமான குருவையடைந்து ஸ்ரீ மந்திரோபதேசத்தை அவரிடமிருந்து பெற வேண்டும்.

गुरुणा समनुगृहीतं मन्त्रं सद्यो जपेच्छतावृत्त्या ।
गुरुदेवतामनूनामैक्यं संभावयन् धिया शिष्यः ॥
मन्त्रे मन्त्रगुरावपि मन्त्री मन्त्रस्य देवतायां च ।
त्रिषु विहितसततभक्तिः प्रेत्येह निजेप्सितं फलं लभते ॥

(சிஷ்யன், குரு தேவதை மந்திரம் இம்மூன்றையும் ஒன்றாகவே மனதாலெண்ணுகிறவனாகவும், மந்திரம், மந்திர

குரு, மந்திர தேவதை இம்மூன்றிலும் எப்பொழுதும் நிலைத்த பக்தியுள்ளவனாகவும், இருந்து கொண்டு குருவினால் உபதேசிக்கப் பெற்ற மந்திரத்தை நூற்றுக்கணக்கான ஆவிருத்தியுடன் ஜபித்து வருவானேல் இம்மையில் ஸகல பலனையுமடைவதுடன் மறுமையிலும் க்ஷேமத்தையடைவான்.) என்ற வசனப்படி குருதேவதைக்கிய தியானத்துடன் ஸ்ரீ மந்திரத்தை ஜபித்து வரவேண்டும். அஃதுடன்

सुविमलचरितस्स्याच्छुद्धमाल्यानुलेपा-
भरणवसनदेहो मुख्यगन्धोत्तमाङ्गः।
सुविशदनखदन्तश्शुद्धधीर्विष्णुभक्तो
वमलरुचिरशय्यस्स्याच्चिरायेन्दिरार्थी ॥
शान्तश्शश्वत्स्मितमधुरपूर्वाभिभाषी दयार्द्रो
देवाचार्यातिथिद्विजनपूजारतः पुण्यशीलः ॥
नित्यस्नायी नियमनिरतः प्रत्यगाशामुखाशी
मन्त्री वर्णाश्रमदृढमतिस्स्याच्चिरायेन्दिरार्थी ॥
श्रीमन्त्रभक्तः श्रितविष्णुदीक्षश्श्रीसूक्तजापी सितधीस्सुशीलः।
स्वदारतुष्टो मितभाषणाशी लोकप्रियस्स्याच्चिरमिन्दिरार्थी ॥

நிலைத்த லக்ஷ்மீப்ரஸாதத்தை விரும்புகின்றவன் களங்கமற்ற நடத்தையுள்ளவனாகவும், சுத்தமான மாலை, ஆபரணம் வஸ்திரம், தேஹம் இவைகளையுடையவனாகவும், தலையில்நல்ல வாஸனையுள்ளவனாகவும், மிகத் தெளிவான நகம் பல் இவைகளையுடையவனாகவும், சுத்தமான புத்தியுள்ளவனாகவும், விஷ்ணு பக்தியுள்ளவனாகவும், அழுக்கற்றதும் அழகியதுமான படுக்கையுள்ளவனாகவும், சாந்தனாகவும், புன்சிரிப்புடன் இனிய வார்த்தையை முன் பேசுகின்றவனாகவும், தயா

ரசத்தால் நனைந்தவனுகவும், தேவன் ஆசார்யன் அதிதி அக்நி இவர்களின் பூஜையில் பற்றுள்ளவனுகவும், புண்ணியமான ஒழுக்கமுள்ளவனுகவும், நியமப்பற்றுள்ளவனுகவும், மேற்கு முகமாகவே போஜனஞ் செய்கின்றவனுகவும், வர்ணாச்ரமத்தில் திருடமானபற்றுள்ளவனுகவும், ஸ்ரீ மந்திர பக்தனுகவும், விஷ்ணு தீக்ஷை பெற்றவனுகவும், ஸ்ரீ ஸூக்தத்தை ஜபிக்கின்றவனுகவும், சுத்தமான புத்தியுள்ளவனுகவும், தனது பத்நியினிடமே விஷய போகஞ் செய்கின்றவனுகவும், கணக்கிலடங்கின பேச்சு ஆகாரம் இவைகளுள்ளவனுகவும், உலகப்பிரியனுகவும் இருக்க வேண்டும் என்றும் மந்திர சாஸ்திரத்திற் சொன்ன அதிகார லக்ஷணத்துடனிருந்து வர வேண்டியது அவசியமானது.

## अथ श्रीमन्त्र : ॥

ओं–अस्य श्रीमहालक्ष्मी महामन्त्रस्य, भृगुः ऋषिः, निचृद्गायत्री च्छन्दः, श्रीमहालक्ष्मीर्देवता। क्रां बीजम्। श्रीं शक्तिः, ल्सूं कीलकम्। श्रीमहालक्ष्मीप्रसाद सिद्ध्यर्थे जपे विनियोगः। क्राम् अङ्गुष्ठाभ्यां नमः॥ श्रां तर्जनीभ्यां नमः॥ ल्सूं मध्यमाभ्यां नमः॥ व्राम् अनामिकाभ्यां नमः॥ स्रां कनिष्ठिकाभ्यां नमः॥ त्रां करतलकरपृष्ठाभ्यां नमः। क्रां हृदयाय नमः। श्रां शिरसे स्वाहा। ल्सूं शिखायै वषट्। व्रां कवचाय हुम्। स्रां नेत्रत्रयाय वौषट्। त्रां अस्त्राय फट्, भूर्भुवस्स्वरोमिति दिग्बन्धः। ध्यानम्–

भूयाद्भूयो द्विपद्माभयवरदकरा तप्तकार्तस्वराभा
शुभ्राभ्राभेभयुग्मद्वयकरधृतकुंभाद्भिरासिच्यमाना ॥
रत्नौघाबद्धमौलिर्विमलतरदुकूलार्तवालेपनाढ्या
पद्माक्षी पद्मनाभोरसि कृतवसतिः पद्मगा श्रीः श्रिये नः॥

लं पृथिव्यात्मने गन्धं समर्पयामि । हं आकाशात्मने पुष्पाणि समर्पयामि । यं वाय्वात्मने धूपमाघ्रापयामि रं अग्न्यात्मने दीपं दर्शयामि। वं अमृतात्मने अमृतं निवेदयामि। सं सर्वात्मने सर्वोपचारन् समर्पयामि इति पञ्चोपचारपूजां कृत्वा

**मूलम्–ओं ह्रीम्, श्रीम्, कमलवासिन्यै श्रीम् ह्रीम् ॥**

இந்த ஸ்ரீ மந்திரத்தை ஒவ்வொரு தினமும் 100 ஆவிருத்திக்குக் குறையாமல் 12லக்ஷம் மொத்தமாக ஜபஞ் செய்ய வேண்டும். ஒவ்வொரு தினமும் மூலமந்திர ஜபத்தின் முடிவில் **श्रां हृदयाय नमः** என்றது முதல் **श्रां अस्त्राय फट्** என்பது வரை சொல்லி முடிந்ததும் **भूर्भुवस्स्वरोमिति दिग्विमोकः** என்று மாற்றிச் சொல்லிக் கொள்ள வேண்டும். * இவ்விதம்

---

* எந்த மந்திரத்தையும் குருபதேச மூலமடைந்து ஜபித்தலே உத்தமமானதால், நேரில் மந்திரோபதேசஞ் செய்யக்கூடிய ஆசாரியனையடைந்தவர் அவர்கள் மூலமாக உபதேசம் பெற்றும், அவ்விதங்கிடைக்காதவர் நம்மையே குருவாக பாவித்து ஸ்ரீ மஹாலக்ஷ்மீ சன்னிதானத்திலிருந்து முதலில் இதை 3 தடவை யுச்சரித்தும் பிறகு ஜபஞ் செய்து வரலாம்.

மந்திர ஜபஞ்செய்து வருவதுடன் ருஷி, சந்தஸ், தேவதை யுடன் இந்த ஸ்ரீ ஸூக்தத்தையும் ஜபித்து வரவேண்டும் **हिरण्यवर्णाम्** என்று தொடங்கி படிக்கப்படும் 15 ருக்குகளே "ஸ்ரீ ஸூக்தம்" எனப்படும். அதற்கு மேலுள்ளவைகள் ஸ்ரீ தேவியின் ஸ்வரூபாதிகளைப் பிரதி பாதிக்கும் **खिल** (கில) ருக்குகள்.

(1) ओम् अस्य श्रीहिरण्यवर्णेति मन्त्रस्य—आनन्द ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते। महालक्ष्मीप्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः।

(2) ओं-तां म आवहेति मन्त्रस्य—कर्दम ऋषिः, अनुष्टुप्छन्दः श्रीरग्निश्च देवते। महालक्ष्मीप्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः।

(3) ओं अश्वपूर्वेति मन्त्रस्य—चिक्लीत ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते। महालक्ष्मी...योगः।

(4) ओं कां सोस्मितामिति मन्त्रस्य—इन्दिरासुत ऋषिः, बृहतीच्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी..योगः।

(5) ओं चन्द्रां प्रभासामिति मन्त्रस्य—आनन्द ऋषिः, त्रिष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते। महालक्ष्मी....योगः।

(6) ओं आदित्यवर्णेति मन्त्रस्य—कर्दम ऋषिः, त्रिष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी...योगः।

(7) उपैतु मामिति मन्त्रस्य—चिक्लीत ऋषिः अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी...योगः।

(8) ओं क्षुत्पिपासामलामिति मन्त्रस्य—इन्दिरासुत ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी....योगः।

(9) ओं बन्धद्वारामिति मन्त्रस्य—आनन्द ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी...योगः।

(10) ओं मनस इति मन्त्रस्य—कर्दम ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी...योगः।

(11) ओं कर्दमेनेतिमन्त्रस्य— चिक्लीत ऋषिः अनुष्टुप्छन्दः श्रीरग्निश्च देवते, महालक्ष्मी...योगः।

(12) ओं आपस्सृजन्त्विति मन्त्रस्य—इन्दिरासुत ऋषिः अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते, महालक्ष्मी...योगः।

(13) ओं आर्द्रां पुष्करिणीमिति मन्त्रस्य—आनन्द ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते। महालक्ष्मी...योगः।

(14) ओं आर्द्रां यः करिणीमिति मन्त्रस्य—कर्दम ऋषिः, अनुष्टुप्छन्दः, श्रीरग्निश्च देवते। महालक्ष्मी...योगः।

(15) ओं ता म इति मन्त्रस्य—चिक्लीत ऋषिः, प्रस्तारपङ्क्तिश्छन्दः, श्रीरग्निश्च देवते। महालक्ष्मी...योगः॥

ஆகவே ஸ்ரீ ஸூக்தம் 15 ருக்குகளிலும் மேலே எழுதப்பட்டபடி ருஷி, சந்தஸ், தேவதை, விநியோகம் இவைகளை சொல்லிக் கொண்டே ஸூக்த பாராயணஞ் செய்ய வேண்டுமென்றும், அவ்விதஞ் செய்யாவிடில் ஜபத்தின் பலனையடைவது சிரமமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஸ்ரீகாமனையுள்ளவர்கள் இவ்விதம் 12 லக்ஷம் ஸ்ரீமந்திரத்தை ஆவிருத்தி செய்து முடித்தவுடன் 120000 தர்ப்பணங்களும் 12000 ஹோமமும், 1200 பிராம்ஹண ஸந்தர்ப்பணமும் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதம் ஹோமஞ் செய்யுங்காலத்து தத்தமது கிருஹ்ய ஸூத்திரத்திற் சொன்னபடி அக்நி ப்ரதிஷ்டை முதல் முகாந்தம்

வரை செய்துகொண்டு அக்நியில் மூலமந்திரத்தைச் சொல்லி ஸ்ரீ மஹா லக்ஷ்மியை ஆவாஹனஞ் செய்து நெய்யை நிவேதனஞ் செய்து கொண்டு பிறகு அடியிற்காட்டிய முறைப்படி ஹோமஞ் செய்ய வேண்டும்.

பூர நக்ஷத்திரத்தில் நந்தியா வட்டை புஷ்பங்களால் ஆயிரத்தெட்டு தடவை ஹோமமும், பூர்ணிமை தினத்தன்று சர்க்கரை, தேன், நெய், இவைகளில் பில்வதளங்களைத் தோய்த்து ஆயிரத்தெட்டு தடவை ஹோமமும், சுக்கில பஞ்சமியில் வெண்தாமரைப் புஷ்பங்களால் அவ்வளவு ஹோமமும், சுக்கிர வாரத்தில் வெள்ளை நிறமான புஷ்பங்களால் அவ்வளவு ஹோமமுஞ் செய்து வரவேண்டும். இவ்விதமே ஒரு வருஷம் முடிய (12 மாதங்களிலும்) ஹோமஞ் செய்து வருவதுடன் ஒவ்வொரு சுக்ல பக்ஷத்துப் பிரதமையன்று தொடங்கி, ஸ்திரீ போகத்தை விலக்கி மெல்லியதும் வெளுப்புமான வஸ்திரத்தைத்தரித்து, வெளுப்பாய் பற்களை சுத்தி செய்து கொண்டு ஷை ஏகாதசிக்குள் ஸ்ரீ சூக்தத்தை பன்னீராயிரந் தடவை பாராயணஞ் செய்து முடித்துக் கொண்டு அன்றே ஸ்ரீ மஹா லக்ஷ்மியை அர்ச்சா மூர்த்தியிலோ யந்திரத்திலோ பிரதிஷ்டை செய்து அதில் பின்னர் எழுதும் முறைப்படி பூஜை செய்யவேண்டும். ஸ்ரீ சூக்தத்தின் முதல் ருக்கைச் சொல்லி श्रीमहालक्ष्मीमावाहयामि என்றும், இரண்டாவது ருக்கைச் சொல்லி आसनं समर्पयामि என்றும், 3 வதால் पाद्यं समर्पयामि என்றும், 4 வது ருக்கைப் படித்து अर्घ्यं समर्पयामि என்றும், 5 வது ருக்கைப்படித்து आचमनं समर्पयामि என்றும், 6 வது ருக்கைப்படித்து स्नापयामि என்றும், 7 வது ருக்கைப்படித்து वस्त्रं धारयामि என்றும், 8 வது ருக்கைப்படித்து आभरणं समर्पयामि என்

றும், 9 வது ருக்கைப்படித்து गन्धान् धारयामि என்றும், 10 வது ருக்கைப்படித்து पुष्पाणि समर्पयामि என்றும், 11வது ருக்கைப்படித்து धूपमाघ्रापयामि என்றும், 12 வது ருக்கைப் படித்து दीपं संदर्शयामि என்றும், 13 வது ருக்கைப்படித்து * निवेदयामि என்றும், 14 வது ருக்கைப்படித்து प्रदक्षिणं समर्पयामि என்றும சொல்லி அந்தந்த உபசாரங்களுடன் பூஜை செய்து பிறகு அக்னிப்பிரதிஷ்டை செய்து முகாந்தஞ் செய்து கொண்டு இந்த ஸ்ரீ ஸூக்தத்தை முழுவதும் சொல்லி தாமரைப் புஷ்பம், பில்வசமித்து, பால், பாயஸம், நெய், இவைகளில் ஒவ்வொன்றினாலும் முறையே 330 தடவை ஹோமஞ் செய்ய வேண்டும். துவாதசியன்று 33 பிராம்ஹ ணர்களுக்கு போஜனஞ் செய்து வைக்க வேண்டும். முற் சொல்லிய ஹோம திரவியங்களில் மந்தாரை, முல்லை, ஆம் பல், நந்தியாவட்டை, மாலதீ, ஜாதி, செங்கழுநீர், வெண் தாமரை, செந்தாமரைப் புஷ்பங்கள், தாழை, சண்பகம் இவைகளையுஞ் சேர்த்துக் கொள்ளலாம். ஆகவே இவ்விதம் 6 மாதஞ் செய்து வந்தால் மஹாலக்ஷ்மியின் கடாக்ஷத்தை யடைகிறான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

மேலும் ஒரு ஜாதகத்தில் தனாதிபதியோ, பாக்கியாதி பதியோ, ஜன்ம லக்கினத்துக்கு 6-8-12 லிருந்தாலும், சத் துருவீடேறி வக்கிர அஸ்தங்கத தோஷமடைந்திருந்தாலும், ஒவ்வொரு வருஷத்திலும் கோசரத்தில் ஜன்மானுஜன்ம மத்ரி ஜன்ம நக்ஷத்திரங்களுக்கு 3,5,7, 9 வது நக்ஷத்திரபதி களின் தசை நடந்து அவர்கள் பாக்கியாதிபதிக்குச் சத்துரு வாய் பாக்கியஸ்தான மேறியுமிருந்தாலும் அந்த ஜீவனுக்குப்

---

* சர்க்கரான்னத்தைப் பரிஷ்காரமாய்ச் செய்து நிவேதனஞ் செய்ய வேண்டும்.

பாக்கிய விஷயத்தில் நேரும் சிரமங்களை விலக்க வேண்டி இந்த ஸ்ரீ ஸூக்தப் பிரயோகத்தை மேலே கண்டபடி ஒருவன் அக்காலஞ் செய்து வருவானேயானால், அவனுக்கு ஜாதக மூலமும், கோசர மூலமும் நேருந் தோஷங்கள் யாவும் விலகி சகல க்ஷேமங்களும் உண்டாகும் என்றும், சாஸ்திரங்கள் வற்புறுத்துகின்றன.

ஆகவே இவ்வித மகா பலனைத் தரத்தக்க ஸ்ரீ ஸூக்த மானது வடமொழி யிலிருப்பதால் வடமொழியில் விசேஷப் பழக்க முள்ளவர்க்கே யன்றி மற்றவர்க்குப் பயன் படா திருத்தலைப் போக்கி தமிழ் மக்கள் யாவர்க்கும் பயன்படு மாறு ஸ்ரீ ருத்திராத்யாயத்தை எளிய தமிழ் நடையில் மொழி பெயர்த்து வெளியிட்டவரும் நியாய வியாகரண பாரங்கதரும், மீமாம்ஸா சிரோமணியுமான பெரம்பூர் ப்ரம்ஹ ஸ்ரீ கணேச சாஸ்திரிகள் ஷை ஸ்ரீ ஸூக்தத்துக்கு இனிய தமிழ் நடையில் பதவுரை, கருத்துரை விசேஷவுரை இவைகளை எழுதி இருக்கிறார். ஷை உரையானது எவ்விதத் திலும் சிறந்ததாகவே இருப்பது பற்றி இதற்கு நாம் முக வுரை எழுதி வெளியிட்டிருக்கிறோம்.

இங்ஙனம் :

**கடலங்குடி நடேச சாஸ்திரிகள்**

வியாகரண வேதாந்த பாரங்கதர்

சோதிட மந்திர சாஸ்திர வித்வான்

17, நடேசய்யர் தெரு, : : மாம்பலம், சென்னை.

## श्रीमहालक्ष्म्यष्टोत्तरशतनामावलिः॥

மஹா லக்ஷ்மியை ஆராதனஞ் செய்பவர்களின்
சௌகரியத்திற்காக லக்ஷ்மீ அஷ்டோத்தர
சத நாமாவளியும் அச்சிடப்படுகிறது.

ओं प्रकृत्यै नमः
विकृत्यै नमः
विद्यायै नमः
सर्वभूतहितप्रदायै नमः
श्रद्धायै नमः
विभूत्यै नमः
सुरभ्यै नमः
परमात्मिकायै नमः
वाचे नमः
पद्मालयायै नमः (10)
पद्मायै नमः
शुचये नमः
स्वाहायै नमः
स्वधायै नमः
सुधायै नमः
धन्यायै नमः
हिरण्मय्यै नमः
लक्ष्म्यै नमः
ओं नित्यपुष्टायै नमः
विभावर्यै नमः (20)
अदित्यै नमः
दित्यै नमः
दीप्तायै नमः
वसुदायै नमः
वसुधारिण्यै नमः
कमलायै नमः
कान्तायै नमः
कामाक्ष्यै नमः
क्रोधसम्भवायै नमः
अनुग्रहप्रदायै नमः (30)
बुद्धये नमः
अनघायै नमः
हरिवल्लभायै नमः
अशोकायै नमः
अमृतायै नमः
दीप्तायै नमः

ओं लोकशोकविनाशिन्यै नमः
धर्मनिलयायै नमः
करुणायै नमः
लोकमात्रे नमः (40)
पद्मप्रियायै नमः
पद्महस्तायै नमः
पद्माक्ष्यै नमः
पद्मसुन्दर्यै नमः
पद्मोद्भवायै नमः
पद्ममुख्यै नमः
पद्मनाभप्रियायै नमः
रमायै नमः
पद्ममालाधरायै नमः
देव्यै नमः (50)
पद्मिन्यै नमः
पद्मगन्धिन्यै नमः
पुण्यगन्धायै नमः
सुप्रसन्नायै नमः
प्रसादाभिमुख्यै नमः
प्रभायै नमः
चन्द्रवदनायै नमः
चन्द्रायै नमः

ओं चन्द्रसहोदर्यै नमः
चतुर्भुजायै नमः (60)
चन्द्ररूपायै नमः
इन्दिरायै नमः
इन्दुशीतलायै नमः
आह्लादजनन्यै नमः
पुष्ट्यै नमः
शिवायै नमः
शिवकर्यै नमः
सत्यै नमः
विमलायै नमः
विश्वजनन्यै नमः (70)
पुष्ट्यै नमः
दारिद्र्यनाशिन्यै नमः
प्रीतिपुष्करिण्यै नमः
शान्तायै नमः
शुक्लमाल्याम्बरायै नमः
श्रियै नमः
भास्कर्यै नमः
बिल्वनिलयायै नमः
वरारोहायै नमः
यशस्विन्यै नमः (80)

ओं वसुन्धरायै नमः
उदाराङ्गायै नमः
हरिण्यै नमः
हेममालिन्यै नमः
धनधान्यकर्यै नमः
सिद्धयै नमः
स्त्रैणसौम्यायै नमः
शुभप्रदायै नमः
नृपवेश्मगतानन्दायै नमः
वरलक्ष्म्यै नमः (90)
वसुप्रदायै नमः
शुभायै नमः
हिरण्यप्राकारायै नमः
समुद्रतनयायै नमः
जयायै नमः
ओं मङ्गलायै नमः
देव्यै नमः
विष्णुवक्षःस्थलस्थितायै „
विष्णुपत्न्यै नमः
प्रसन्नाक्ष्यै नमः (100)
नारायणसमाश्रितायै नमः
दारिद्र्यध्वंसिन्यै नमः
देव्यै नमः
सर्वोपद्रववारिण्यै नमः
नवदुर्गायै नमः
महाकाल्यै नमः
ब्रह्मविष्णुशिवात्मिकायै„
त्रिकालज्ञानसम्पन्नायै नमः
भुवनेश्वर्यै नमः

श्रीमहालक्ष्म्यष्टोत्तरशतनामावलिः संपूर्णा ॥

மஹா லக்ஷ்ம்யஷ்டோத்தர சத நாமாவளி முற்றிற்று.



श्रीः ॥

श्रीमहालक्ष्म्यै नमः ॥

# श्रीसूक्तम् ॥

# ஸ்ரீ ஸூக்தம்.

*அவதாரிகை.*—" अग्निर्वै देवानां होता " " होतारं रत्नधातमम् " என்றபடி அக்னிபகவான் எல்லாத் தேவர்களையும் அவரவர்களின் ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக் கொள்வதற்காக யாகபூமிக்கு வரும்படி அழைப்பவராயிருப்பதால் என்னால் செய்யப்படும் யாகத்தில் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்வதற்காக ஸ்ரீ தேவியை அழைக்க வேண்டுமென்று அவர் முதலில் பிரார்த்திக்கப்படுகிறார்—

**हिरण्यवर्णां हरिणीं सुवर्णरजतस्रजाम् ।**
**चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह ॥**

(ப-ரை.) **जातवेदः**=ஹே அக்கினி தேவனே! **हिरण्यवर्णाम्**=தங்கத்தின் நிறமுள்ளவளும் **हरिणीम्**=(எல்லாப் பாபங்களையும்) நாசஞ் செய்கின்றவளும், அல்லது பெண் மானின் ஸ்வபாவமுமுடையவளும் **सुवर्णरजतस्रजाम्**=தங்கம், வெள்ளி, இவைகளால் செய்யப்பட்ட ஹாரங்களை (ஆபரணங்களை) அவையவைகளுக்கு உசிதமான அவயவங்களில் அணிந்து கொண்டிருப்பவளும் **चन्द्राम्**=சந்திரனைப் போல் ஆனந்தத்தைக் கொடுப்பவளும் **हिरण्मयीम्**=தங்கமயமான திருமேனியையுடையவளுமான **लक्ष्मीम्**=(எல்லா) லக்ஷணங்களும் பொருந்திய ஸ்ரீதேவியை **मे**=என்னுடைய (கர்மாவில் ஹோமஞ் செய்

யப்படும் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்வதற்காக) आवह= அழைப்பீராக. (எ—று.)

விசேஷம்.—உயர்ந்த தங்கத்தால் செய்யப்பட்ட விக்கிரஹமும், மெருகு கொடுத்து அழுக்கெடுக்கு முன் ஸ்வாபாவிக நிறமும் ஒளியும் உள்ளதாய் காணப்படாமலிருப்பதால் हिरण्मयीम् என்று சொன்னதினாலேயே தங்கத்தின் நிறமும், ஒளியும் ஸ்ரீ தேவியின் திருமேனியில் இருப்பதாய் நிச்சயமாய் சித்திக்காதென்று கருதி "हिरण्यवर्णाम्" என்ற பதம் போடப்பட்டது. போலியான ஏனைய வஸ்துக்களும் கொஞ்ச காலம் தங்கத்தின் காந்தி, நிறம் முதலிய குணங்களுடன் கூடினதாயிருப்பதால் அதற்கொப்பாக ஸ்ரீ தேவியின் திருமேனியை நினைக்கக்கூடாதென்று உபதேசிப்பதற்காக, சுத்தமான தங்கம் போல் என்றைக்கும் கெடாத காந்தி நிறம் முதலியவைகள் பொருந்திய திருமேனியுடையவளாய் இருக்கிறாள் என்றதைத் தெரிவிக்கிற हिरण्मयीम् என்ற பதம் போடப்பட்டது. चन्द्राम् என்ற பதத்தால் உலகில் எந்தெந்த பொருள்கள் சந்தோஷத்தைக் கொடுக்கக் கூடியவைகளோ அவையவைகளுக்கு அத்தன்மையானது ஸ்ரீ தேவியின் ஸான்னித்யத்தால் ஏற்படுகிறதென்றும் உபதேசிக்கப்பட்டதாய் கொள்ளவும்.

குறிப்பு.—முதல் மந்திரத்திலும், இரண்டாவது மந்திரத்திலுமுள்ள जातवेदः என்ற பதத்துக்கு லக்ஷ்மீபதியான மஹாவிஷ்ணு எனப் பொருள் கொண்டு லக்ஷ்மியின் ஸாந்நித்யம் தன்னிடமேற்பட வேண்டுமென்று மஹாவிஷ்ணுவினிடம் பிரார்த்தனை செய்யப்படுவதாய் சிலர் உரை செய்கின்றனர்.

**तां म आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम् ।**
**यस्यां हिरण्यं विन्देयं गामश्वं पुरुषानहम् ॥ २ ॥**

(ப—ரை,) **जातवेद:**=ஹே அக்கினி பகவானே! **यस्यां**= எந்த ஸ்ரீ தேவியானவள் (என்னால் நடத்தப்படும் கர்மத்தின் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்ள வருவாளேயானால் **अहम्**= நான்) **हिरण्यम्**=தங்கத்தையும் **गाम्**=பசுவையும் **अश्वम्**=குதிரையையும் **पुरुषान्**=புத்திரன், மித்திரன், சேவகன் முதலிய புருஷர்களையும் **विन्देयम्**=அடைவேனோ **ताम्**=அந்த **लक्ष्मीम्**= லக்ஷ்மீதேவியை **मे**=என்னுடைய (யாக பூமியை விட்டு) **अनपगामिनीम्** = விலகாமலிருக்கும்படி **आवह** = அழைப்பீராக. (எ—று)

(க—ரை.) "பொருளிலார்க் கிவ்வுலகமில்லை" என்று மஹான்கள் உபதேசித்தபடி இவ்வுலக வாழ்க்கைக்கு இன்றியமையாச்சாதனமான தனம், பசு முதலியவைகள் ஸமிருத்தியா யிருப்பதானது எந்த ஸ்ரீ தேவியின் ஸான்னித்யத்திற் கறிகுறியாகின்றதோ அந்த ஸ்ரீ தேவியின் ஸான்னித்யமானது ஸ்வபாவத்தில் நிரந்தரமாய் ஏற்படுவதற்கு வேண்டிய ஸத்கர்மங்களைச் சென்ற ஜன்மத்தில் நான் அனுஷ்டிக்கவில்லை என்பது தத்காலஸ்திதியிலிருந்து நன்கு வெளியாகின்றது. தாங்களோவாக் அபிமானி தேவதையா யிருப்பதால் வாக்சாதுர்யத்தைக் கொண்டு யாவரையும் திருப்திப் படுத்தித்தன்வசமாக்கிக் கொள்ள சக்தி வாய்ந்தவர்களா யிருக்கிறீர்கள். ஆதலால் தாங்கள் தயவு செய்து எவ்விதம் அழைத்தால் ஸ்ரீதேவியானவள் என்னைவிட்டு ஒரு பொழுதும் விலகமாட்டாளோ அவ்விதம் அவளை அழைக்க வேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது (எ—று.)

(அ—கை.) இவ்விதம் சென்ற இரண்டு மந்திரங்களால் அக்கினிபகவான் மூலமாக ஸ்ரீ தேவியின் ஸான்னித்யத்தைப் பிரார்த்தித்து, பிறகு ஜகன்மாதாவான ஸ்ரீதேவியை, 'எனது ஸத்கர்மத்தின் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்ள வரவேண்டும்' என்று அழைப்பதற்கு தனக்கே நேரில் உரிமையிருப்பதை, मातृप्रिय किल जड सुतमामनन्ति (மூடனை பிள்ளையைத் தாய்க்கு வேண்டியவனுய்ச் சொல்லுகிறார்கள்) என்றபடி பாலனை தன்னுடைய மழலைச் சொற்களே மாதாவான ஸ்ரீ தேவிக்கு அதிக ஸந்தோஷத்தை உண்டு பண்ணி வாத்ஸல்யத்தைப் பெருக்கு மென்பதையும் அறிந்து உபாஸகன் ஸ்ரீ தேவியை நேரில் அழைக்கிறான்.—

**अश्वपूर्वां रथमध्यां हस्तिनादप्रबोधिनीम् ।**

**श्रियं देवीमुपह्वये श्रीर्मा देवीर्जुषताम् ॥ ३ ॥**

(ப—ரை.) अश्वपूर्वाम्=குதிரைகளை முன்னுலுடையவளும் रथमध्याम्=தேர்களை மத்தியிலுடையவளும் हस्तिनादप्रबोधिनीम्=யானையின் சப்தத்தால் (தனது வரவை)த் தெரிவிப்பவளும் देवीम्=பிரகாசமுள்ளவளும் श्रियम्=அனைவராலும் ஆச்ரயிக்கத் தகுந்தவளுமான மஹாலக்ஷ்மியை उपह्वये=ஸமீபம் வரும்படி அழைக்கிறேன். देवी:=பிரகாசமுள்ள श्री:= லக்ஷ்மீ தேவியானவள் मा=என்னைக்குறித்து जुषताम्=அனுக்கிரஹஞ்செய்வதற்கு வருவாளாக. (எ—று.)

(க—ரை.) ஹே ஸ்ரீதேவியே! மதம் மேலிட்டு வீறிடும் யானையின் சப்தத்தால் தங்களது வரவைத் தெரிவிக்கின்றனவும், முதலில் குதிரைகள், பிறகு தேர்கள், அதற்குப் பிறகு யானைகள் என அணிவகுக்கப்பட்டிருக்கின்றனவுமான சைன்னியங்களுடனேயே தாங்கள் வெளிக்கிளம்பி வருவது வழக்

கமாதலால் அடியேனை அனுக்கிரஹிக்க வரும்பொழுது முற் சொல்லிய பிருதுகளுடனேயே வந்து குதிரை முதலியவை களைக் கொடுத்து என்னைச் சக்கரவர்த்தியாகச் செய்ய வேண் டும். ஜகன்மாதாவாயிருப்பதுபற்றி ஸர்வலோகசரண்யையான தங்களைத் தவிற வேறு யாரை ஆச்ரயிப்பது. பொருக்க முடி யாத தாரித்திரியமாகிற காட்டுத் தீயால் பொசுக்கப்படுவ தால் ஒரு தடவைக்கு ஆயிரந்தடவைபாய் அழைக்கிறேன். தாமதமின்றி வந்து அருள்புரிய வேண்டுமென்று இதனல் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

कां सोस्मितां हिरण्यप्राकारामार्द्रां ज्वलन्तीं तृप्तां तर्पयन्तीम् । पद्मे स्थितां पद्मवर्णां तामिहोपह्वये श्रियम् ॥

(ப—ரை.) काम्=சுகவடிவமாயிருப்பவளும் सोस्मिताम्=மந்தஹாஸத்துடன் கூடினவளும் हिरण्यप्राकाराम्= தங்கமயமான மதில் சுவரையுடையவளும் आर्द्राम्=தயா ரசத் தால் நனைக்கப்பட்டவளும் ज्वलन्तीम्=(லாவண்யமாகிற தேஜஸ்ஸினுல்) பிரகாசிப்பவளும் तृप्ताम्=(அடைய வேண் டியவை) யாவையுமடைந்திருப்பதால் நித்தியதிருப்தையா யிருப்பவளும் तर्पयन्तीम्=தன்னை உபாஸிப்பவர்களையும் நித்தியதிருப்தர்களாகச் செய்பவளும் पद्मे=தாமரைப் புஷ்பத் தில் स्थिताम्=உட்கார்ந்திருப்பவளும் पद्मवर्णाम्=தாமரைப் புஷ்பத்தின் நிறமுள்ளவளும் ताम्=உலகப்பிரசித்தையுமான श्रियम्=ஸ்ரீ தேவியை इह=எனது யாகபூமிக்கு (வரும்படி) उपह्वये=அழைக்கிறேன். (எ—று.)

(க—ரை.) ஹே லக்ஷ்மீ தேவியே! தங்கள் பிரஸா தத்தை யடைந்த ஜீவனுக்கு அளவிட முடியாத சுகமேற்படு வது யாவர்க்கும் அனுபவத்துக்கு வந்த விஷயம். ஆதலால்

அத்தகைய மஹிமை வாய்ந்த தங்களுடைய ஆனந்தம் இவ்வளவென்று அளவிடவும் முடியுமோ? ஆனது பற்றியே தாங்கள் தங்களுடைய திருமேனியின் ஸௌகுமார்யம், ஸௌந்தர்யம், திவ்யபரிமளம் இவைகளுக்குக் கொஞ்சமாவது அனுகுணமாயும், தங்கமயமான மதில்சுவரையுடைய வைகுண்டத்திலிருக்கும் ஐரம்மதம் என்ற திவ்விய ஸரஸ்ஸில் முளைத்திருக்கிறதாயுமுள்ள தாமரைப் புஷ்பத்தில், லோகத்தில் அடைய வேண்டியவை யாவற்றையும் அடைந்திருப்பதால் ஏற்பட்ட நிரதிசய சுகத்தை வெளியிடும் மந்தஹாஸமுள்ள முகாரவிந்தத்துடனும், ஜகன்மாதாவாயிருப்பது பற்றி ஜீவராசிகளிடத்தி லியற்கையி லமைந்த தயையுடனும் கூடினவர்களாய், கடாக்ஷபாத மாத்திரத்தால் தன்னைப் பூஜிப்பவர்களுக்கு அபீஷ்டங்களை வர்ஷித்துக்கொண்டு வீற்றிருக்கிறீர்கள். தாங்கள் அவ்வித மஹிமை தங்கினவர்களாயிருந்த போதிலும் தீனனான எனது பிரார்த்தனைக்கிணங்கி அனுக்கிரஹிப்பதற்கு வரவேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

குறிப்பு—ஸ்ரீ தேவியைத் தியானஞ் செய்பவர்கள் சென்ற இரண்டு மந்திரங்களிற்சொல்லிய பிரகாரம் தியானஞ் செய்ய வேண்டும்.

(அ—கை.) பெரியோர்களின் பிரசாதம் சீக்கிரமாய் ஏற்படுவதற்குச் சரணம் புகுதலே சிறந்த ஸாதனமாதலாலும் ஸ்ரீ தேவியைச்சரணமடைந்து நன்மையை யடைவதைக்காட்டிலும் தீமையை விலக்கிக் கொள்வதையே முதலில் யாவரும் விரும்புவார்களாதலாலும் தீமையான தாரித்திரியம்விலக வேண்டு மென்று முதலில் இம்மந்திரத்தால் பிரார்த்திக்கப்படுகிறது.—

**चन्द्रां प्रभासां यशसा ज्वलन्तीं श्रियं लोके देवजुष्टा-**
**मुदाराम्। तां पद्मिनीमीं शरणमहं प्रपद्येऽलक्ष्मी-**
**र्मे नश्यतां त्वां वृणे ॥ ५ ॥**

(ப-ரை.) **चन्द्राम्**=சந்திரனைப் போல் அனைவர்க்கும் ஆனந்தத்தைக் கொடுப்பவளும் **प्रभासाम्**=அதிகமான காந்தியை (லாவண்யத்தை) யுடையவளும் **यशसा**=சரணமடைந்தவர்களைக்காப்பாற்றுகிறவள் என்ற கீர்த்தியால் **लोके**=எல்லா உலகத்திலும் **ज्वलन्तीम्**=விளங்குகிறவளும் **देवजुष्टाम्**=ப்ரம்ஹா முதலிய தேவர்களால் அவரவர்களின் அபீஷ்டஸித்தி நிமித்தம் பக்தியுடன் ஸேவிக்கப்பட்டவளும் **उदाराम्**=அதிகமாய்க் கொடுப்பதென்ற குணமுள்ளவளும் **पद्मिनीम्**=பத்மினீ என்ற சிறந்த ஜாதியைச் சேர்ந்தவளும் **ताम्**=எல்லா வேதங்களிலும் பிரசித்தையுமான **श्रियम्**=அனைவராலும் ஆச்ரயிக்கத் தகுந்த ஸ்ரீ தேவியை **अहम्**=நான் **शरणम्**=சரணமாக **प्रपद्ये**=அடைகிறேன். **मे**=என்னுடைய **अलक्ष्मीः**=தாரித்திரியமானது **नश्यताम्**=நாசமடையட்டும் **त्वाम्**=உன்னை **वृणे**=மறுபடியும் சரணமடைகிறேன். **अत्र "ईम्" इति अनर्थको निपातः** (எ-று.)

(க-ரை.) ஹே ஸ்ரீ தேவியே! திருமேனியின் லாவண்யாதிசயத்தால் யாவரையும் சந்தோஷப்படுத்துபவளாயும் சரணமடைந்தவர்களை ஸம்ரக்ஷிப்பவள் என்று எல்லா லோகங்களிலும் பிரசித்தி பெற்றவளாயும், அவ்விதப் பிரசித்திக்கிணங்க ப்ரும்ஹாதி தேவர்களால் சரணமடையப்பட்டவளாயும், சரணமடைந்தவர்கள் விஷயத்தில் தனது ஔதார்ய குணத்தை வெளியிடுபவளாயும், அவ்வித சுவபாவத்திற் கனுகுணமான "பத்மினீ" என்ற சிறந்த ஜாதி

யைச் சேர்ந்தவர்களாயு மிருக்கிற தங்களைப் பல தடவை சரணமடைகிறேன். அதனால் தாரித்திரியம் விலக வேண்டு மென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

आदित्यवर्णे तपसोऽधि जातो वनस्पतिस्तव वृक्षोऽथ बिल्वः। तस्य फलानि तपसा नुदन्तु मायान्तरा याश्च बाह्या अलक्ष्मीः ॥ ६ ॥

(ப—ரை.) आदित्यवर्णे=சூரியனின் நிறமுடைய ஹே ஸ்ரீ தேவியே! तव=உனக்கு (இருப்பிடமாயும்) वनस्पतिः= எல்லா மரங்களுக்கும் அரசனாயும் बिल्वः=பில்வம் என்றபெயர் கொண்டதாயும் अथ=மங்களமாயு மிருக்கிற वृक्षः= மரமானது तपसः=(தாங்கள் செய்த) தவத்திலிருந்து अधि-जातः=எல்லாவற்றிலும் மேலானதாக உண்டாயிற்று. तस्य= அந்த பில்வமரத்தினுடைய फलानि=பழங்கள் आन्तराः=உள் ளில் அந்தக்கரணத்தில் இருக்கின்ற मायाः=தோஷங்களையும் बाह्याः=வெளி இந்திரியங்களில் இருக்கின்ற याः=எந்த अलक्ष्मीः= தாரித்திரியத்தைக்கொடுக்கும் தோஷங்களுண்டோ (ताः)च= அவைகளையும் तपसा=(தங்களது) அனுக்கிரஹத்தால் नुदन्तु= நாசஞ் செய்யட்டும். (எ—று.)

(க—ரை.) கோடி சூரியனுக் கொப்பான காந்தியை யுடைய ஹே ஸ்ரீ தேவியே! "बिल्वो लक्ष्म्याः करेऽभवत्" (பில் வம் லக்ஷ்மீ தேவியின் கையில் முளைத்தது) என்று வாமன புராணத்தில் கூறினபடி தாங்கள் தவம்புரியுங்கால் தங்களது கையிலிருந்து உண்டானதுபற்றி தங்களது பரிபூரணானுக் கிரஹத்தைப் பெற்று எல்லா மரங்களுக்கும் அரசனான பில்வமரத்தினுடைய பழங்களை எல்லா அங்கங்களிலும் பூசிக் கொள்வதுடன் உட் கொள்ளுகிறேன். அதனால் மனது

வெளிப்புலங்கள் இவைகளில் தங்கிக்கிடக்கும் தாரித்திரிய ஹேதுவான தோஷங்கள் நாசமடைய வேண்டு மென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)

**उपैतु मां देवसखः कीर्तिश्च मणिना सह ।**

**प्रादुर्भूतोऽस्मि राष्ट्रेऽस्मिन् कीर्तिमृद्धिं ददातु मे ॥ ७ ॥**

(ப-ரை.) **देवसखः**=மஹாதேவனின் தோழனை குபேரனும் **कीर्तिश्च**=நல்ல பெயரைக்கொடுக்கும் தேவதையும் **मणिना सह**=நவ நிதிகளுடன் கூட **माम्**=என்னை **उपैतु**=அடையட்டும் **अस्मि**=நான் **अस्मिन्**=இந்த **राष्ट्रे**=ராஜ்யத்தில் **प्रादुर्भूतः**=உண்டாயிருக்கிறேன். **मे**=என்னுடைய (இந்த ராஜ்யத்தில்) **कीर्तिम्**=நல்ல பெயரையும் **ऋद्धिम्**=பணப் பெருக்கையும் **ददातु**=கொடுக்கட்டும். (எ-று.)

(க-ரை.) ஹே ஸ்ரீதேவியே! நவநிதிகளுக்குமதிபனான குபேரன் தன்னைவந்து ஆச்ரயிக்க வேண்டுமென்றும், கீர்த்தியில்லாவிடில் எவ்வளவு பொருளிருந்தும் இல்லாமைக்குச் சமானமாதலால் ஸம்பத்துடன் நல்ல பெயரும் உலகத்தில் உண்டாக வேண்டுமென்றும், தன்னைப்போல் தனது தேசத்தில் வஸிக்கும் யாவருக்கும் அதிக ஸம்பத்து, நல்ல பெயர் இவைகள் உண்டாக வேண்டு மென்றும் இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)

**क्षुत्पिपासामलां ज्येष्ठामलक्ष्मीं नाशयाम्यहम् ।**

**अभूतिमसमृद्धिं च सर्वां निर्णुद मे गृहात् ॥ ८ ॥**

(ப-ரை.) **क्षुत्पिपासामलाम्**=பசிதாஹமாகிற தோஷத்தையுடையவளும் **ज्येष्ठाम्**=ஸ்ரீ தேவிக்கு முன் உண்டான

வளுமான अलक्ष्मीम्=தாரித்திரியத்தைக் கொடுக்கும் மூதே வியை अहम्=நான் नाशयामि=(தங்கள் பிரஸாதத்தால்) நாசஞ் செய்ய வேண்டும். सर्वम्=எல்லா விதமான अभूतिम्=விரும் பிய பொருள் கைகூடா திருத்தலேயும் असमृद्धिं च=கிடைத்த வஸ்துக்கள் மேன்மேலும் விருத்தியடையா திருத்தலேயும் मे=என்னுடைய गृहात्=வீட்டிலிருந்து निर्णुद=மிகுதி யின்றி வெளியே விரட்டுவாயாக. (எ-று.)

(க-ரை.) ஹே ஸ்ரீ தேவியே! உண்ண உணவில்லாமலும், அருந்தத் தண்ணீர் இல்லாமலும் கஷ்டப்படுவதே தங்களது தமக்கையான ஜ்யேஷ்டா தேவியின் பரிபூரண சான்னித்யத்திற் குறிகுறியாக யிருக்கின்றது. அம்மஹானுபாவை என்னை விட்டு விலக வேண்டும். பல துறைகளிலும் பொருள் ஏராளமாய்க் கிடைக்க வேண்டும். கிடைத்த பொருள் மேன்மேலும் விருத்தியடைய வேண்டும். இவையெல்லாம் தங்களது பிரஸாதமின்றி கிடைக்காது. ஆதலால் தாங்கள் அருள்புரிய வேண்டு மென்று இதனல் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)

गन्धद्वारां दुराधर्षां नित्यपुष्टां करीषिणीम् ।
ईश्वरीं सर्वभूतानां तामिहोपह्वये श्रियम् ॥ ९ ॥

(ப-ரை.) गन्धद्वाराम्=திவ்ய பரிமளத்தை யடையாளமாக உடையவளும் दुराधर्षाम्=(ஒருவராலும்) ஜயிக்கத்தகாதவளும் नित्यपुष्टाम्=தனம், தான்யம், சந்தானம் முதலியவைகளால் என்றைக்கும் நிறைந்திருப்பவளும் करीषिणीम्=அதிகமான பசுக்களையுடையவளும் सर्वभूतानां=எல்லாப் பிராணிகளுக்கும் ईश्वरीम्=யஜமானியும் ताम्=எங்கும் பிரசித்தையு

மான श्रियम्=ஸ்ரீ தேவியை इह=இங்கே (எனது கிருஹத்திற்கு) उपह्वये=வரும்படி அழைக்கிறேன். (எ-று.)

(க-ரை.) எந்த விடத்தில் ஸ்ரீ தேவியின் கடாக்ஷம் விழுகிறதோ (அதாவது சம்பத்திருக்கிறதோ) அவ்விடத்தில் எப்பொழுதும் நல்ல வாசனையும் தனதான்ய ஸந்தானஸமிருத்தியும், அதிகமான பசு, கன்று இவைகளும் ஏற்படுகின்றன, அவனுக்கு ஒருவராலும் தீங்கு செய்ய முடிவதில்லை. அவனையேஅனைவரும் ஸ்நேஹத்துடன் ஆச்ரயிக்கிறார்கள். இவ்விஷயம் யாவருக்கு மனுபவத்திலிருக்கக் கூடியதே. இவ்வைபவங்களைக் கொடுத்தருள்புரியும் ஸ்ரீ தேவிக்கு முற்கூறிய வைபவங்கள் எவ்வளவு அதிகமாயிருக்க வேண்டும்! முற்கூறிய சகல விதமான வைபவங்களையும் உபாஸிப்பவர்களுக்கு அனுக்கிரஹஞ் செய்யும் சுவாபமுடைய ஸ்ரீ தேவியை நான் பக்தியுடன் அழைக்கிறேன். என்று இதன் கருத்து. (எ-று.)

**मनसः काममाकूतिं वाचस्सत्यमशीमहि ।**

**पशूनां रूपमन्नस्य मयि श्रीः श्रयतां यशः ॥ १० ॥**

(ப-ரை.) श्रीः=ஹே ஸ்ரீ தேவியே! मनसः=மனத்தினுடைய आकूतिम्=சந்தோஷத்தையும் कामम्=பேராவலையும் वाचः=வாக்கினுடைய सत्यम्=உண்மையையும் पशूनां=பசுக்களுடைய रूपम्=பால், தயிர், நெய் முதலியவைகளையும் अन्नस्य=சாப்பிடக்கூடிய பொருள்களுடைய (रूपम्=பக்ஷ்ய போஜ்யாதிகளையும்) अशीमहि=அடைவோமாக. मयि=என்னிடம் यशः=நல்ல பெயர் श्रयताम्=அடையட்டும் (ஏற்படட்டும்.) (எ-று.)

(க—ரை.) ஹே ஸ்ரீதேவியே! பேராவல் கொண்டு விரும்பப்படும் பொருள்களையும், அதன் மூலமேற்படும் சந்தோஷத்தையும் தாங்கள் கொடுக்க வேண்டும். பெரும்பாலும் பணத்தைப்பற்றிப் பேசும் பொழுது யாவருக்கும் சம்பவிக்கும் பொய் வார்த்தையானது என்னிடம் உண்டாக வேண்டாம். எனது பசுக்கள் குடங்குடமாய்ப் பாலை கரக்க வேண்டும். பக்ஷ்ய போஜ்ய, சோஷ்ய, லேஹ்ய மென்ற நான்கு விதமான, உணவுகளும், அவைகளைப் புஜிப்பதற்கு வேண்டிய சக்தியும் உண்டாக வேண்டும். இவைகளுடன் உலகத்தில் நல்ல பிரசித்தியும் ஏற்படவேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

**कर्दमेन प्रजा भूता मयि संभव कर्दम ।**

**श्रियं वासय मे कुले मातरं पद्ममालिनीम् ॥ ११ ॥**

(ப—ரை) **कर्दमेन**=கர்தமர் என்று பெயர் கொண்ட தங்களால் (श्रीः=ஸ்ரீ தேவியானவள்) **प्रजा**=**प्रकृष्टा जा=अपत्यं यस्यास्सा, जा=अपत्यमिति यास्कवचनात्**। சிறந்த புத்திரனுள்ளவளாக **भूता**=ஆனாள். **कर्दम**=கர்தமர் என்று பெயர் கொண்டவரும் ஸ்ரீ புத்திரருமான ஹே மஹானே! **मयि**=என்னிடத்தில் **संभव**=வசிப்பீராக **मे**=என்னுடைய **कुले**=வம்சத்தில் **मातरम्**=உமது மாதாவாயும் **पद्ममालिनीम्**=தாமரைப் புஷ்ப ஹாரத்தை அணிந்துக் கொண்டிருப்பவளாயும் இருக்கிற **श्रियं** ஸ்ரீ தேவியை **वासय**=வசிக்கும்படி செய்வீராக. (எ-று.)

(க—ரை.) ஹே ஸ்ரீ புத்திரரான கர்த்தமரே! தாங்கள் எனது கிருஹத்தில் வஸிக்க வேண்டும். தாங்கள் எனது கிருஹத்தில் வஸித்து வந்தால் தாங்களிடம் மிக்க வாத்ஸல்யமுள்ள ஸ்ரீ தேவியும் எனது கிருஹத்தில் நிரந்தரமாய்

வஸித்து வருவாள். அதன் மூலம் எனது வம்சத்திலேயே ஸ்ரீ தேவியை வஸிக்கும்படி செய்ததாயாகும். (எ—று.)

(அ-கை.) ஒருவனுக்கு எவ்வளவு பொருளிருந்த போதிலும், அவனது பரிவாரங்கள் அவனிடமும், ஒன்றோடொன்றும் ஸ்நேகமற்றவர்களாயிருந்தால், மேன்மேலும் துக்கமே ஏற்படுமாதலால் முதலில் ஜலத்திலிருக்குந் தேவதைகளிடம் தனது சுற்றத்தார்களுக்கும் தனக்கும் பரஸ்பரம் ஸ்நேஹம் பெருக வேண்டுமென்று பிரார்த்திக்கப்படுகிறது.

**आपस्सृजन्तु स्निग्धानि चिक्लीत वस मे गृहे।**

**नि च देवीं मातरं श्रियं वासय मे कुले ॥ १२ ॥**

(ப—ரை.) आप:=ஜலத்தில் மறைந்திருக்கும் தேவதைகள் स्निग्धानि=(எனது பரிவாரங்களை) ஒன்றோடொன்று ஸ்நேஹமுள்ளவைகளாக सृजन्तु=செய்யட்டும். चिक्लीत=சிக்லீதர் என்ற பெயர் பூண்டவரும் * ஸ்ரீ புத்திரருமான ஹே மஹானே! मे=என்னுடைய गृहे=வீட்டில் वस=வஸிப்பீராக. देवीम्=பிரகாசித்துக் கொண்டிருப்பவளாயும் मातरम्=உமது மாதாவாயும் இருக்கிற श्रियंच=ஸ்ரீதேவியை मे=என்னுடைய कुले=வம்சத்தில் निवासय=வஸிக்கும்படி செய்வீராக.

(க—ரை.) ஹே ஜலத்தில் வஸிக்குந்தேவதைகளே! புழுதியில் ஜலம் சேர்ந்தால் அவைகள் ஒன்றோடொன்று ஒட்

---

*चिक्लीत श्रीसुत स्वामिंश्चिरं निवस मद्गृहे। मत्कुले सुचिरं तिष्ठ मच्चित्ते सन्निधिं कुरु॥ त्वदागमनमात्रेण त्वन्माता त्वामनुव्रजेत्। त्वयि प्रीतिपरा सा हि तव च्छन्दानुवर्तिनी ॥ श्रीदेवीं तां मम गृहे चिरं वासय मातरम्। नमोऽस्तु तुभ्यं चिक्लीत श्रीदेव्यै च नमो नमः ॥ इति सूक्तार्थसंग्रहे वर्तते ॥

டிக்கொள்ளுகின்றன வென்பது யாவருமறிந்த விஷயம் இதற்குக் காரணமாய் ஜலத்தில் ஸ்நேஹம் என்ற ஒரு குணமிருக்கிறது. அந்த குணம் உங்களால் ஜலத்தினிடம் இயற்கையிலமைக்கப்பட்டது. அதே குணம் தங்களது பிரஸாதத்தால் எனது பரிவாரங்களிடம் ஏற்படவேண்டும். சிக்லீதர் என்ற பெயர் பூண்ட வரும் ஸ்ரீ புத்திரருமான ஹே மஹானே! தாங்கள் எனது கிருஹத்தில் வாஸம் செய்ய வேண்டும்! தாங்கள் எனது கிருஹத்தில் வசிப்பீர்களேயானால் தங்களிடம் அதிக வாத்ஸல்யமுள்ள ஸ்ரீ தேவியும் எனது கிருஹத்தில் எப்பொழுதும் வாஸஞ் செய்வாள். ஆதலால் தாங்கள் தயவு செய்ய வேண்டு மென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

**आर्द्रां पुष्करिणीं पुष्टिं सुवर्णां हेममालिनीम् ।**
**सूर्यां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह ॥ १३ ॥**

(ப—ரை.) **जातवेद:**=ஹே அக்கினிபகவானே! **आर्द्राम्**= (இயற்கையிலமைந்த தயாரசத்தால்) நனைந்தவளும் **पुष्करिणीम्**=தாமரைப் புஷ்பத்தையுடையவளும், அல்லது ஜலத்தை அபிஷேகம் செய்கின்ற யானையின் துதிக்கையையுடையவளும் **पुष्टिम्**=சமிருத்தியைக் கொடுப்பவளும் **सुवर्णाम्**=நல்ல நிறமுடையவளும் **हेममालिनीम्**=நல்ல தங்கத்தாற் செய்யப்பட்ட ஹாரம் முதலிய ஆபரணமுள்ளவளும் **सूर्याम्**=சூரியனைப்போல் பிரகாசிக்கின்றவளும் **हिरण्मयीम्**=தங்கமயமான திருமேனியையுடையவளுமான **लक्ष्मीम्**=லக்ஷ்மீ தேவியை **मे**= என்னுடைய (யாகத்தில் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்வதற்காக) **आवह**=அழைப்பீராக (எ-று.)

**आर्द्रां यःकरिणीं यष्टिं पिङ्गलां पद्ममालिनीम् ।**

**चन्द्रां हिरण्मयीं लक्ष्मीं जातवेदो म आवह ॥ १४ ॥**

(ப-ரை) **जातवेदः**=ஹே அக்னிபகவானே! **आर्द्राम्**=தயாரஸத்தால் நனைந்திருப்பவளும் **यःकारिणीम्**=பிரம்பைக் கையில் வைத்துக் கொண்டிருப்பவளும் **यष्टिम्**=நியாயமான சிக்ஷை உருவமாயிருப்பவளும் **पिङ्गलाम्**=பொற்கொன்னை நிறமுடையவளும் **पद्ममालिनीम्**=தாமரைப் புஷ்பஹாரத்தை யுடையவளும் **चन्द्राम्**=சந்திரனைப்போல் ஆனந்தத்தைக் கொடுப்பவளும் **हिरण्मयीम्**=தங்கமயமான உருவமுள்ளவளும் **लक्ष्मीम्**=எல்லா லக்ஷணங்களுடனும் பொருந்தியவளுமான ஸ்ரீ தேவியை **मे**=என்னையும் பொருட்டு **आवह**=அழைப்பீராக. (எ-று.)

(க-ரை.) ஹே அக்கினி பகவானே! ஸ்ரீ தேவி ஜகந்மாதாவாயிருப்பது பற்றி ஜீவராசிகளிடத்து இயற்கையிலமைந்த கருணாரசத்தால் நனைந்திருப்பதால் அவளிடம் தாங்கள் 'இந்த ஜீவன் செய்யும் கர்மாவில் கொடுக்கிற ஹவிர்பாகத்தைப் பெற்று கொள்ள வரவேண்டும். இவனை அனுக்கிரஹிக்க வேண்டும்' எனப் பிரார்த்தித்தால் அவள் உடனே வந்து விடுவாள். அவள் எங்கு வருகிறாளோ அங்கே வீடு, தோட்டம், பசு, கன்று முதலிய வேண்டிய பொருள்கள் யாவற்றிலும் எவ்விதக்குறைவும் ஏற்படாது. இதுவே அவளது அனுக்கிரஹத்திற்கும், சான்னித்யத்திற்கும் அறிகுறி. அந்த ஸ்ரீ தேவியை என்னை அனுக்கிரஹம் செய்வதற்காக அழைத்து வரவேண்டு மென்று இதனாலும் சென்ற மந்திரத்தாலும் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)

**तां म आवह जातवेदो लक्ष्मीमनपगामिनीम् ।**
**यस्यां हिरण्यं प्रभूतं गावो दास्योऽश्वान्विन्देयं पुरुषानहम्**

(ப-ரை) **जातवेद:**=ஹே அக்னிபகவானே! **यस्याम्**=எந்த லக்ஷ்மீ தேவியின் சான்னித்யத்தால் **अहम्**=நான் **प्रभूतम्**=அதிகமான **हिरण्यम्**=தங்கத்தையும் **गाव:**=பசுக்களையும் **दास्य:**=தாஸிகளையும் **अश्वान्**=குதிரைகளையும் **पुरुषान्**=சேவகர்களையும் **विन्देयम्**=அடைவேனோ **ताम्**=அந்த **लक्ष्मीम्**=லக்ஷ்மீ தேவியை **अनपगामिनीम्**=என்னை விட்டு விலகாமலிருக்கும்படி **मे**=என்னுடைய (யாகத்தில் ஹவிஸ்ஸைப் பெற்றுக் கொள்வதற்காக) **आवह**=அழைப்பீராக.

(க-ரை.) ஹே அக்னிபகவானே! எந்த ஸ்ரீ தேவியின் சான்னித்ய மஹிமையால் அதிகமான பசுக்களையும், தாஸிகளையும், குதிரைகளையும், சேவகர்களையும், பிள்ளை, பேரன், முதலியவர்களையும், அடைந்து நித்திய சுகியாய் ஆவேனோ, அந்த ஸ்ரீ தேவிக்கு "இவனை விட்டு ஒரு பொழுதும் விலகக்கூடாது" என்ற சங்கற்பம் எவ்விதம் உறுதியாய் ஏற்படுமோ அவ்விதம் எனது தைன்யம் முதலியவைகளைத் தெரிவித்து அழைத்து வரவேண்டுமென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)



## अथ श्रीसूक्तशेष: ॥

(அ-கை.) இனி பலசுருதிகளுக்கும், மற்றுமுள்ள ஸ்ரீ தேவியைத் துதிக்கும் மந்திரங்களுக்கும் அர்த்தம் செய்யப்படுகிறது.

यश्शुचिः प्रयतो भूत्वा जुहुयादाज्यमन्वहम् ।
सूक्तं पञ्चदशर्चं च श्रीकामस्सततं जपेत् ॥ १ ॥

(ப—ரை.) यः=எவன் श्रीकामः=சம்பத்தில் விருப்ப முள்ளவனோ (सः=அவன்) शुचिः=(பாஹ்ய) சுத்தியுள்ளவனாகவும் प्रयतः=இந்திரியங்களை அடக்கினவனாகவும் भूत्वा=ஆகி अन्वहम्=தினந்தோறும் आज्यम्=நெய்யை जुहुयात्=ஹோமஞ் செய்யவேண்டும். पञ्चदशर्चम्=பதினைந்து ருக்குள்ள सूक्तं च=ஸூக்தத்தையும் सततम्=இடைவிடாமல் जपेत्=ஜபிக்க வேண்டும், (எ—று.)

(க—ரை.) எவன் ஸம்பத்தைப்பெறுவதில் விருப்பமுள்ளவனோ அவன் வெளியிலும், உள்ளும், சுத்தியுள்ளவனாய்இந்திரியங்களை யடக்கி நியமத்துடன், அவனவனுடைய கிருஹ்ய ஸூத்திரத்திற் சொல்லியபடி அக்னியைப் பிரதிஷ்டை செய்து முகாந்தஞ் செய்து கொண்டு இந்த ஸ்ரீ ஸூக்தத்திலுள்ள ஒவ்வொரு ருக்கையும் படித்து ஒவ்வொரு தரம் ஹோமஞ் செய்ய வேண்டும். பிறகு இந்த ஸ்ரீ ஸூக்தத்தை அடி முதல் முடிவு வரையிலும் தன்னாலியன்ற வரை திரும்பவும் திரும்பவும் ஜபிக்க வேண்டும். ஜபத்தின் அளவுக்குத் தக்கபடி பயன் சீக்கிரமாகவோ, தாமதித்தோ, அல்லது ஜன்மாந்தரத்திலோ, அதிகமாகவோ குறைவாகவோ கிடைக்குமென்று மந்திர சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது. *ஒரு பொழுதும் மந்திர ஜபம் வீணாகாது. இவ்விதம்

* तथाचोक्तं मन्त्ररहस्ये—अधिकारी यथा काले यथा देशे यथा मनुम् । यादृग्विधानसंधानः प्रजपेत्तादृशं फलम् । कालदेशक्रियारूपाद्यनुरूपं लभेन्नरः । अत्युत्कटेन पुण्येन तस्मिन्नेव हि जन्मनि ।

ஜபித்து வந்தால் கொஞ்ச காலத்திற்குள் மஹா தரித்திரனும் குபேரனைப் போல் சம்பத்துள்ளவனும் இம்மையில் வாழ்ந்து மறுமையிலும் ஸ்வர்க்காதி போகங்களை அனுபவிப்பான் என்று இதனால் உபதேசிக்கப்பட்டது. (எ—று.)

**पद्मानने पद्मऊरू पद्माक्षी पद्मसंभवे ।**
**तन्मे भजसि पद्माक्षी येन सौख्यं लभाम्यहम् ॥ २ ॥**

(ப—ரை.) **पद्मानने**=தாமரைப் புஷ்பம் போலுள்ள முக மண்டலத்தை யுடையவளே ! **पद्मऊरू**=தாமரைப் புஷ்பம் போலுள்ள துடைகளை யுடையவளே ! **पद्माक्षी**=தாமரைப்புஷ்பம் போலுள்ள கண்களை யுடையவளே ! **पद्मसंभवे**=தாமரைப் புஷ்பத்திலுண்டானவளே **येन**=எவ்விதம் **अहम्**=நான் **सौख्यम्**=சுகத்தை **लभामि**=அடைவேனோ **तत्**=அவ்விதம் **मे**=என்னை **भजसि**=அனுக்கிரஹம் புரிவதற்காகவரவேண்டும்.

(க—ரை.) அதிகமாய் சம்பத்திருந்த போதிலும் ஜன்மாவில் ஒரு நிமிஷமும் சுகானுபவமில்லாமல் அதன் மூலம் எப்பொழுதும் கஷ்டத்தையே சிலர் அனுபவித்து வருகிறார்கள். அவ்வித ஸம்பத்தால் யாது பிரயோஜனம். கிடைத்த சம்பத்தால் நல்ல சுகானுபவம் ஏற்படவேண்டும். அந்தச் சம்பத்தே சம்பத்தாகும், அவ்வித சம்பத்தை எனக்குக் கொடுக்க வேண்டுமென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

---

**तत्फलं प्राप्नुयात्सिद्धो नात्र कार्या विचारणा ॥ पुण्यस्यानुत्कटत्वेतु चिरात्किंचित्फलं लभेत् । प्रतिबंधकबाहुल्ये फलं जन्मान्तरे लभेत् । न देवतोषणं व्यर्थं भविष्यति कदाचन । तस्मान्मन्त्रं जपेद्योगी यतश्शुद्धेन्द्रियक्रियः ॥**

**अश्वदायी गोदायी धनदायी महाधने ।**
**धनं मे जुषतां देवि सर्वकामांश्च देहि मे ॥ ३ ॥**

(ப—ரை.) महाधने=அதிக சம்பத்துள்ள ஹே ஸ்ரீதேவியே अश्वदायी=குதிரைகளைக்கொடுப்பவளாயும் गोदायी=பசுக்களைக் கொடுப்பவளாயும் धनदायी=சம்பத்தை கொடுப்பவளாயும் (असि=இருக்கிறாய்.) देवि=பிரகாசமுள்ள ஹே ஸ்ரீ தேவியே! मे=என்னை धनम्=சம்பத்தானது जुषताम=அடையட்டும் मे= எனக்கு सर्वकामांश्च=விரும்பிய எல்லாப்பொருள்களையும் देहि கொடுப்பாயாக. (எ—று.)

**पद्मानने पद्मिनि पद्मपत्रे पद्मप्रिये पद्मदलायताक्षि ।**
**विश्वप्रिये विश्वमनोनुकूले त्वत्पादपद्मं मयि सन्निधत्स्व ॥**

(ப—ரை.) पद्मानने=தாமரைப் புஷ்பம் போலுள்ள முக மண்டல முள்ளவளே! पद्मिनि="பத்மினீ" என்ற சிறந்த ஜாதியைச் சேர்ந்தவளே! पद्मपत्रे=தாமரைப் புஷ்பத்தை ஆசனமாயுடையவளே! पद्मप्रिये=தாமரைப் புஷ்பத்தில் பிரிய முள்ளவளே! पद्मदलायताक्षि=தாமரைப் புஷ்பத்தின் இதழ் போல் நீண்ட கண்களையுடையவளே! विश्वप्रिये=சகல ஜீவ ராசிகளிடத்திலும் அன்புள்ளவளே! विश्वमनोनुकूले=எல்லோ ருடைய மனத்துக்கும் அனுகூலமாயிருப்பவளே! (அனைவ ராலும் பஜிக்கத்தகுந்தவளே) त्वत्पादपद्मम्=உனது சரணார விந்தத்தை मयि=என்னிடம் सन्निधत्स्व=வைக்க வேண்டும்.

**धनमग्निर्धनं वायुर्धनं सूर्यो धनं वसुः ।**
**धनमिन्द्रो बृहस्पतिर्वरुणं धनमस्तु ते ॥ ५ ॥**

(ப—ரை.) ते=உன்னுடைய (பிரசாதத்தால்) अग्निः= அக்னி பகவான் धनम्=தனத்தை (கொடுப்பவராக) अस्तु=

ஆகட்டும். वायु:=வாயுபகவான் धनम्=தனத்தை கொடுப்பவ ராக अस्तु=ஆகட்டும். सूर्य:=சூரிய பகவான் धनम्=தனத்தைக் (கொடுப்பவராக) अस्तु=ஆகட்டும். वसु:=(எட்டு) வஸுக்கள் धनम्=தனத்தைக் (கொடுப்பவர்களாக) अस्तु=ஆகட்டும் इन्द्र:=இந்திரன் धनम्=தனத்தைக் (கொடுப்பவனாக) अस्तु= ஆகட்டும். बृहस्पति:=பிருஹஸ்பதி பகவான் धनम्=தனத்தை (கொடுப்பவராக) अस्तु=ஆகட்டும். वरुणम्=வருண பகவான் धनम्=தனத்தைக் (கொடுப்பவராக) अस्तु=ஆகட்டும்.

(க—ரை.) ஓ ஸ்ரீ தேவியே! தங்களது கிருபா கடாக்ஷ விசேஷத்தால் இந்திரன் முதலிய தேவர்கள் சம்பத்தை யடைந்திருக்கிறார்களாகையால் அவர்களுள் யாரிடம்சென்று சம்பத்தைக் கேட்டாலும் எனக்குக் கொடுக்கும்படி உத்தி ரவு செய்ய வேண்டும். எப்பொழுதும் தங்களிடமே நேரில் வந்து வேண்டிய பொருளை வாங்கிக்கொள்வது ஒரு சமயம் அசாத்தியமான காரியமாகும். ஆதலால் தாங்கள் நான் கேட் டுக் கொண்டபடி உத்திரவு செய்ய வேண்டும் என்று இத னில் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

**वैनतेय सोमं पिब सोमं पिबतु वृत्रहा ।**
**सोमं धनस्य सोमिनो मह्यं ददातु सोमिन: ॥ ६ ॥**

(ப—ரை.) वैनतेय=ஹே கருடனே सोमम्=சோமரசத்தை पिब=பானஞ் செய்ய வேண்டும், वृत्रहा=விருத்திராசுரனைக் கொன்ற இந்திரன் सोमम्=சோம ரசத்தை पिबतु=பானஞ் செய்யட்டும். सोमिन:=சோம பானஞ் செய்வதற்கு யோக் யதை பெற்ற மற்றுமுள்ள தேவர்கள் सोमम्=சோம யாகத் திற்காக धनस्य=பணத்தை मह्यम्=என்னையும் பொருட்டு ददातु=கொடுக்கட்டும். सोमिन:=சோம பானஞ் செய்வதற்கு

யோக்யதை பெற்ற தேவர்கள் धनदम्=பொருளை ददातु=
கொடுக்கட்டும் (எ—று.)

(க—ரை.) இந்திரனும், கருடனும், ஸோமபானம்
செய்வதற்கு யோக்யதை பெற்ற மற்றுமுள்ள தேவர்களும்,
ஸம்பத்தை ஸத்கர்மங்களுக்கு உபயோகமுள்ளதாயாகும்படி
க்கொடுக்க வேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது.

குறிப்பு.—அதிகமான ஆதரவினால் "ஸோமபானஞ்
செய்யக்கூடிய தேவர்கள் ஸத்கர்ம ஸாதனமான ஸம்பத்தைக்
கொடுக்க வேண்டும்" என்று இரண்டு தடவை பிரார்த்திக்
கப்பட்டனரென்றறிய வேண்டும்.

न क्रोधो नच मात्सर्यं न लोभो नाशुभा मतिः ।
भवन्ति कृतपुण्यानां भक्तानां श्रीसूक्तं जपेत् ॥ ७ ॥

(ப—ரை.) कृतपुण्यानाम्=புண்ணியத்தை அதிகமாய்ச்
செய்தவர்களான भक्तानाम्=ஸ்ரீ தேவி பக்தர்களுக்கு क्रोधः=
கோபம் नभवन्ति=உண்டாவதில்லை (अत्र बहुवचनमार्षम्) मात्स-
र्यम्=பொறாமையானது नभवति=உண்டாவதில்லை. लोभः=
லோபம் என்ற கெட்ட குணம் नभवति=உண்டாவதில்லை
अशुभा=அசுபமான (பாபஸம்பந்தமான) मतिः=புத்தியானது
नभवति=உண்டாகாது. (तदर्थम्=அவ்வித பக்தி ஸித்திப்பதற்
காக) श्रीसूक्तम्=ஸ்ரீ ஸூக்தத்தை जपेत्=ஜபிக்க வேண்டும்.

(க—ரை.) பல ஜன்மங்களில் நல்ல கர்மங்களைச் செய்து
ஸ்ரீ தேவியினிடம் அர்ப்பணம் செய்தவர்களுக்குத்தான் அவ
ளிடம் பக்தி ஏற்படும். அவ்வித பக்தியைப் பெற்றவர்க
ளுக்கு கோபம், பொறாமை, பேராசை, கெட்டகாரியங்களில்
பிரவிருத்தி இவைகள் ஏற்படாது. அவ்வித பக்தி உண்டா
வதற்கு நெருங்கின ஸாதனம் ஸ்ரீஸூக்த ஜபமாதலால் இதைச்
செய்ய வேண்டுமென்று இதனால் உபதேசிக்கப்பட்டது.

सरसिजनिलये सरोजहस्ते
धवलतरांशुकगन्धमाल्यशोभे ।
भगवति हरिवल्लभे मनोज्ञे
त्रिभुवनभूतिकरि प्रसीद मह्यम् ॥ ८ ॥

(ப-ரை.) सरसिजनिलये=தாமரைப்புஷ்பத்தை வீடாக உடையவளே! सरोजहस्ते=தாமரைப் புஷ்பத்தை கையில் வைத்துக் கொண்டிருப்பவளே! धवलतरांशुकगन्धमाल्यशोभे= மிகவும் வெளுத்ததான, வஸ்திரம், சந்தனம், மாலை இவைகளால் பிரகாசிக்கின்ற அழகையுடையவளே! भगवति= நிறைந்த ஐச்வரியம், முதலிய ஆறு குணங்களுடன் கூடினவளே! हरिवल्लभे=விஷ்ணுவுக்குப் பிரியமாயிருப்பவளே! (பத்னியா யிருப்பவளே!) मनोज्ञे=மனதைக்கவருகின்றவளே! त्रिभुवनभूतिकरि=மூன்று உலகத்துக்கும் ஸம்பத்தைக்கொடுப்பவளே! मह्यम्=என்னையும் பொருட்டு प्रसीद=பிரஸன்னையாக ஆக வேண்டும். (எ-று.)

குறிப்பு.—ஸ்ரீ ஸூக்தத்தை ஜபிக்கும் பொழுது இம்மந்திரத்தால் உபதேசிக்கப்பட்டபடி ஸ்ரீ தேவியை தியானஞ் செய்ய வேண்டும். ஸ்ரீ ஸூக்தத்தை அடி முதல் முடிவுவரை ஜபிக்க அவகாசமில்லாவிடில் இந்த ஶ்லோகத்தை யாவது அர்த்தானுஸந்தானத்துடன் அவரவர்கள் சக்திக்குத் தக்கவாறு ஜபித்து வந்தால் இம்மையிலும் மறுமையிலும் சுகத்தைப் பெறலாம். (எ-று.)

विष्णुपत्नीं क्षमां देवीं माधवीं माधवप्रियाम् ।
लक्ष्मीं प्रियसखीं देवीं नमाम्यच्युत वल्लभाम् ॥ ९ ॥

(ப—ரை.) विष्णुपत्नीम्=மஹாவிஷ்ணுவின் பார்யையா யிருப்பவளும் क्षमाम्=(பக்தர்களின் அபராதங்களை) பொருத் துக் கொள்பவளும் देवीम्=பிரகாசிக்கின்றவளும் माधवीम्= வசந்த காலத்தில் விசேஷ ஸான்னித்தியம் செய்பவளும் माधवप्रियाम्=மஹாவிஷ்ணுவின் ப்ரீதிக்குப் பாத்திரமாயிருப் பவளும் प्रियसखीम्=தனது பக்தர்களிடத்தில் தோழியைப் போல் நடப்பவளும் देवीम्=விளையாட்டுடன் (ஆனந்தத்து டன்) கூடினவளும் अच्युतवल्लभाम्=மஹா விஷ்ணுவின் பார் யையுமான लक्ष्मीम्=லக்ஷ்மீ தேவியை नमामि=நமஸ்காரஞ் செய்கிறேன். (எ—று.)

குறிப்பு —பக்தியின் மேலீட்டால் இம்மந்திரத்தில் ஒரு தரம் குறிப்பிட்ட விஷயமே மறுபடியும் திருப்பிச் சொல் லப்பட்டிருப்பதாய்க் கருத வேண்டும்.

महालक्ष्मी च विद्महे विष्णुपत्नी च धीमहि ।
तन्नो लक्ष्मीः प्रचोदयात् ॥ १० ॥

(ப—ரை.) विष्णुपत्नीच=விஷ்ணுவின் பார்யையான ஸ்ரீ தேவியை धीमहि=தியானஞ் செய்கிறோம் (तदर्थम्=அதற்காக) महालक्ष्मीच=மஹா லக்ஷ்மியை विद्महे=வேதம், சாஸ்திரம், குருபதேசம் இவைகளால் தெரிந்து கொள்ளுகிறோம். तत्= அவளைத் தெரிந்து கொள்வதற்கு लक्ष्मीः=லக்ஷ்மீ தேவியான வள் नः=எங்களை प्रचोदयात्=தூண்ட வேண்டும். " महालक्ष्मी विष्णुपत्नी " इत्युभयत्रापि विभक्तिव्यत्ययः छान्दसः। (எ—று.)

(க—ரை.) " यमेवैष वृणुते तेन लभ्यः" (எவன் விஷயத் தில் ஸ்ரீ தேவியானவள் "இவன் நமது ஸ்வரூபாதிகளைத் தெரிந்து கொண்டு த்யானஞ் செய்து க்ஷேமத்தை அடையட்

டும்" என்று சங்கற்பிக்கிறுளோ அவனாலே தான் இவளது சுவரூபாதிகள் அறியப்படும்) என்று கடோபனிஷத்தில் உபதேசித்தபடி ஸ்ரீ தேவியின் சுவரூப சுவபாவாதிகளைத் தெரிந்து கொள்வதும் அவளது பிரஸாதாதீனமென்று இதனால் உபதேசிக்கப்பட்டது. இதை "லக்ஷ்மீ காயத்ரீ" என்று கூறுவர். ஆதலால் இதை மட்டும் ஜபித்தாலும் விசேஷபலனைப் பெறலாம். (எ—று.)

**श्रीर्वर्चस्स्वमायुष्यमारोग्यमाविधाच्छोभमानं महीयते ।**

**धान्यं धनं पशुं बहुपुत्रलाभं शतसंवत्सरं दीर्घमायुः ॥**

(ப—ரை.) श्रीः=ஸ்ரீ தேவியானவள் महीयते=பக்தனை எனக்கு शोभमानम्=ப்ரகாசிக்கின்ற वर्चः=சரீர காந்தியையும் स्वम्=பொருளையும் आयुष्यम्=ஆயுள் விருத்தியைத்தருமுபாயங்களையும் आरोग्यम्=ரோகமில்லாமையையும் धान्यम्=உணவுப்பொருள்களையும் धनम्=ஸம்பத்தையும் पशुम्=பசுவையும் बहुपुत्रलाभम्=அநேக புத்திர ப்ராப்தியையும் शतसं-वत्सरम्=நூறு வருஷம் दीर्घम्=நீண்ட आयुः=ஆயுளையும் आविधात्=செய்ய வேண்டும் (கொடுக்க வேண்டும்.) (எ—று.)

ஸ்ரீ ஸூக்தம் முற்றிற்று.

शुभमस्तु । महालक्ष्मीः प्रीयताम् ॥

---

# துர்க்கா ஸூக்தம்.

## முகவுரை

'துர்க்கா' என்பவள் ஸர்வ ஜகன்மாதாவான ஸ்ரீ ராஜ ராஜேஶ்வரியின் அவதார விசேஷ மென்பதை மந்திர ஆகம சாஸ்திரங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன. ஆகவே இந்த துர்க்கா தேவியின் ஸ்வபாவகுணாதிகளைச் சொல்லும் வேத மந்திரத்துக்கு 'துர்க்கா ஸூக்தம்' என்று பெயர். இந்த துர்க்கா ஸூக்தமானது ஐந்து ருக்குள்ளதென்று சில ரும் 7-ருக்குள்ளதென்று சிலருஞ் சொல்லுகின்றனர்.

இந்தத் துர்க்கா ஸூக்தத்தில் तामग्निवर्णाम् என்ற இரண் டாவது ருக் ஒன்றே ஸ்ரீ துர்க்காதேவியின் சுவபாவாதிகளைத் தெரிவிக்கின்றது. ஏனைய 6-ருக்குகளும் துர்க்கா தேவியின் பதியான மஹா தேவனின் சுவரூபத்தைப் போதிக்கின்றன. ஆகவே பிரபஞ்ச மாதா பிதாக்களான துர்க்கா பரமேச்வரர் களுடைய பிரஸாதத்தை யடைய வேண்டிய ஜீவன் அவ்விரு வர்களின் பிரஸாத ஜனகமான இந்த ஸூக்தத்தைப் பாராய ணஞ் செய்து வருவானேல் வாழ்வினையின் பயனாய் இந்த ஜன்மத்தில் நேர்ந்துள்ள சகல பாபங்களையும் விலக்கிக் கொண்டு அவ்வாதி தம்பதிகளின் பிரஸாத பாத்திரனாய் இம் மையில் சகல க்ஷேமங்களையுமடைந்து மறுமையிலும் சகல க்ஷேமங்களையுமடையலாம் என்பது இந்த ஸூக்தத்தின் அர்த்த விசாரஞ் செய்வதிலிருந்து ஏற்படுகிறது.

சங்கை.—இந்த ஸூக்தமானது துர்க்கா பரமேஶ்வரர் களின் சுவரூபாதிகளைப்பொதுவாய்ச் சொல்லுவதாயிருந்தால்

“ஸ்ரீ துர்க்கா ஸூக்தம்” என்ற தனிப் பெயர் கொண்டு அழைக்கப்படுவதின் காரணம் என்னே. ?

உத்தரம்.—உலக ஸம்ரக்ஷணம் என்ற காரியத்தில் இருவரும் ஸமப்பிரதானர்களா யிருந்த போதிலும் இவ்வுலகில் கஷ்டத்தை யடைந்த குழந்தைகள் பெரும்பாலும் மாதாவினிடமே தமது கஷ்டங்களைத் தெரிவித்துக் கொள்வது வழக்க மாதலாலும், ஜனித்தது முதல் நல்ல அறிவும் வியாபகத்தன்மையும் வரும் வரை ஒவ்வொரு கஷ்டகாலங்களிலும் மாதாவே முன்வந்து துக்கங்களைப்போக்குகிருள் என்ற அனுபவமிருப்பதாலும், வேதத்திலும் பஜிக்க வேண்டியவர்களை யுபதேசிக்குமிடத்து முதலில் “मातृदेवो भव” (தாயைத் தெய்வமாக எண்ணு) என்று முதலில் சொல்லும் வழக்க மிருப்பதாலும் ஆதிதம்பதிகள் இருவருக்குமே இந்த ஜீவனை ரக்ஷிக்க வேண்டிய பொருப்பானது சமப்பிரதானமா யிருந்த போதிலும் ஜகன்மாதாவான துர்க்கா தேவியாரையே தனது ரக்ஷணத்துக்கு முக்கிய இலக்கியமாக இந்த ஜீவன் கொண்டான் என்றும், அவ்விதங் கொள்வதும் நியாயந்தானென்றும் காட்டவே துர்க்கா சூக்தம் என்ற தனிப் பெயரால் இந்த ஸூக்தம் அழைக்கப்படுவதாகக் கொள்ள வேண்டும்.

சங்கை —இந்த துர்க்கா சூக்தத்தில் “जातवेदा:, अग्निः” முதலிய பதங்களே அடிக்கடி படிக்கப்பட்டிருப்பதிலிருந்தும் “अग्नि: जातवेदा:” என்ற முடிவைக் கொண்டும் “तामग्निवर्णाम्” என்ற இரண்டாவது ருக்கைத் தவிர பாக்கியுள்ள 6 ருக்குகளிலும் அக்கினியின் பிரார்த்தனையே செய்யப்பட்டதாக ஏற்படுவதால் துர்க்காபதியும் பிரபஞ்ச பிதாவுமான ஸ்ரீ பரமேசுவரனின் ஸ்வரூபாதிகளை யுபதேசிப்பதாகச் சொல்லுவது எவ்விதம் பொருந்தும் ?

உத்தரம்.—“नावेव सिंधुम्” என்ற திருஷ்டாந்தம் வாயிலாக विश्वा दुरिता अतिपर्षत् ” (எல்லாத் துரிதங்களையும் போக்கட்டும்) என்று பல தடவை திருப்பிச் சொல்லியிருப்பதால் வெளியாகும் ஜனன மரண ரூபமான ஸம்ஸார ஸமுத்திரத்தால் உண்டான ஸகல துக்க நிவிருத்தி செய்யுந்தன்மையும், “अस्माकं तनूनामविता बोधि” எங்களுடைய சரீரத்தை ரக்ஷிப்பவரென்றும், அதற்குரிய ஞானமுள்ளவர் என்றும் கூறினதால் வெளியாகும் ஸர்வ ஜீவாந்தர்யாமியாயிருக்குந் தன்மையும் “अध्वरेषु कं प्रणोषि” (யாகங்களில்பலனைத்தருகின்றீர்) என்றதால் ஏற்படும் கர்மபலனைக் கொடுக்குந்தன்மையும் “नाकस्य पृष्ठमभिसंवसान:” (நாகம் என்ற பரமபதத்தில் வசிக்கின்றவராய்) என்றதால் பரமபதமென்ற உத்தம பதவியை உபாஸகர்களுக்குத் தருந்தன்மையுமான பரமேசுவரனிடத்திலேயே பொருத்தமுள்ள லிங்கங்களைக் கொண்டு அக்கி, ஜாதவேதஸ் என்ற பதத்தின் ரூடியை மாற்றி जात= உண்டான वेद:=ஞானத்தையுடையவர் (அதாவது ஸர்வக்ஞர்) என்றும் अग्नि:=எல்லாவற்றுக்கும் முன்னுள்ளவர் என்றுமான யௌகிகமான அர்த்தத்தை இங்கு கொள்ள வேண்டும் இவ்விதமே आकाशस्तल्लिङ्गात् என்ற விடத்தில் வாக்கிய சேஷத்தில் கூறப்பட்ட அஸாங்குசித சர்வஜகத் காரணத்வம் என்ற லிங்கத்தைக் கொண்டு आकाश என்ற பதத்தின் ரூடியை மாற்றி आ=நாலு பக்கத்திலும் काश பிரகாசிக்கின்றவர் என்று பொருள் செய்யப்பட்டிருக்கிறது. அவ்விதமே இங்கும் கொள்ளல் வேண்டும்.

சங்கை.—“अग्नि:, जातवेदा: ” என்ற சுருதியை வாக்கிய சேஷத்திற் சொல்லிய பரமேச்வர அஸாதாரண லிங்கங்களைக் கொண்டு வேறு விதமாக நயனஞ் செய்வது போலவே अग्नि முதலிய சுருதியையே முக்கியமாகக் கொண்டு மேற்

கூறிய லிங்கங்களைக் வேறு விதமாக மாற்றக் கூடாதோ வெனின்.?

உத்தரம்.—நாகத்தைத் தருந் தன்மை, மிச்சமின்றி எல்லாத் துக்கம், பாபம் இவைகளைப் போக்குந் தன்மை, கர்ம பலனை கொடுக்குந தன்மை, பொதுவாய் யாவர்க்கும் பயத்தையுண்டாக்குந்தன்மை முதலிய லிங்கங்கள் அக்னியினிடம் எவ்விதமும் பொருந்தாது. ஆனது பற்றி அவைகளையே அடியோடு பரித்தியாகஞ் செய்ததாகவும் ஏற்படும்.

அஃதுடன் துக்கத்தால் வாடி ஸர்வதுக்க நிவிருத்தியைப் பிரார்த்திக்கும் ஜீவனுக்கு ஏதோ சில துக்கம் விலகினுல் போதுமென்ற எண்ணமானது ஒரு பொழுதும் பெரும்பாலும் உண்டாகமாட்டாது அதை யொட்டி தனது ஸர்வ துக்கங்களையும் விலக்கும் சக்தி வாய்ந்த ஒரு தேவதையே அவன் தியானஞ் செய்வான், அவ்விதம் ஸர்வதுக்க நிவிருத்தி செய்யுந்தன்மை முதலியன பரமேஶ்வரனிடமே ஸ்வரஸமாய்ப் பொருந்துவதால் अग्नि என்ற பதத்திலுள்ள ரூடியை விட்டு யௌகிகமான பொருள் கொள்ளுதல் அவசியமாக ஏற்படுகின்றது, மேலும் "यादृशी भावना यत्र सिद्धिर्भवति तादृशी, तं यथा यथोपासते तथैव भवति" என்ற நியாய பூர்வகவசனப்படி ஸர்வ துக்கங்களையும் நிவிருத்தி செய்தல் முதலிப கல்யாண குணங்கள் நிறைந்த துர்க்கா பரமேசுவரர்களின் தியானத்தாலேயே அவ்வித தியானத்திற்கனுகுணமான ஸர்வதுக்க நிவிருத்தியையடைகிறுன் என்று சொல்வதை விட்டு துர்க்கையின் ஆவிர்ப்பாவாதிகரணமான கேவலாக்னியை அவனிடம் இல்லாததும், ஒரு சமயத்திலும் பொருந்காததுமான குணவிசேஷங்களுடன் ஸ்துதிசெய்தலானது ஆச்ரயத்வாரா ஆச்ரயிக்கு வருமென்றும் வைத்து துர்க்

கையையே ஸ்துதிசெய்ததாகக் கொண்டால் **वैरोचनीम्, कर्मफलेषु जुष्टाम्, वैष्णवीम्,** முதலிய பதங்களாற் போதிக்கப்படும் நித்யஸித்த பரமேச்வர சம்பந்தத்தை அடியோடு மறந்து கேவல துர்க்கைக்கே நேரில் அவ்வித சக்தியைக்கற்பிப்பதாகவுமேற்படும். மேலும் ஸ்காந்தத்திலுள்ள நாகர கண்டத்தில் ஸோமாஸ்கந்த மூர்த்தித்யானத்தாலேயே இந்திராதிதேவர்கள் ஸகல க்ஷேமத்தையுமடைந்திருப்பதாகக் கூறுதல் மூலமுபதேசிக்கப்பட்ட சக்தி விசிஷ்ட சிவத்யானத்தின் சிறப்பையும் சக்தி விசிஷ்ட சிவத்யானஞ் செய்தலே ஸர்வ க்ஷேமத்தையுந் தருமென்று வற்புறுத்தி உபதேசிக்கும் மந்திர சாஸ்திர முறையையும் விட்டதாக ஏற்படும். ஆகவே இந்தத் துர்க்கா ஸூக்தத்தால் 1, 3, 4, 5, 6, 7. இந்த ருக்குகளால் பரமேஸ்வர அஸாதாரண குண விசேஷத்தைக் கூறும் வாயிலாக பரமேஸ்வரானு ஸந்தானமும், இரண்டாவது மந்திரத்தால்துர்க்கா தேவியின் அஸாதாரண மஹிமானு ஸந்தானத்தை முன்னிட்டு துர்க்கா தேவியின் தியானமும் சொல்லப்பட்டதாகக் கொள்ளல் வேண்டும்

ஆகவே இவ்வித மஹாபலனைத்தரத்தக்க இந்த மந்திரத்துக்கு ஸாயணாசாரியர் பாஷ்யம் செய்யுமிடத்து **अथानिष्टपरिहारार्थत्वेन जप्या मन्त्राः** (பிறகு அனிஷ்ட பரிஹாரத்திற்காக ஜபிக்க வேண்டிய மந்திரங்கள்) என்று அவதாரிகை செய்திருப்பதாலும், மஹான்களான மஹரிஷிகளால் செய்யப்பட்ட சோதிட சாஸ்திரத்தில், எந்த ஜாதகத்திலும் சந்திரன், சுக்கிரன், சனி, ராகு இவர்கள் 3, 6, 8, 11, 12, க்குடையவர்களாகவோ, அல்லது அவ்விடத்திலிருப்பவர்களாகவோ, ஜந்மாறு ஜந்மத்ரி ஜன்மநக்ஷத்திரங்களுக்கு 3, 5, 7, 9, இந்த நக்ஷத்திரபதிகளாகவோ ஆகி அவர்களின் தசை புக்தி அந்தரம் இவைகள் நடந்தால் நேரும் தோஷத்தையும், கோசரத்

தில் ஜன்மானு ஜன்ம த்ரிஜன்ம நக்ஷத்திரங்களுக்கு 3,5,7,9, வது நக்ஷத்திரங்களில் வக்கிர அஸ்தங்கத தோஷமடைந்து சஞ்சரிக்கும் பொழுது ஜன்மலக்கினம், சந்திரலக்கினம், தசாநாதர் பாவநாதர் இவர்களிருக்குமிடம் இவற்றுக்கு மேலே கண்ட கிரஹங்கள் எந்தப் பாவாதி பதிகளாக ஆகி எந்தப் பாவத்தில் சஞ்சரிக்கின்றனரோ அந்தப் பாவங்களுக்கு வரும் தோஷத்தையும் விலக்க வேண்டி இம்மஹா மஹிமை பொருந்திய துர்க்கா ஸூக்த பாராயணத்தை விதித்திருப்பதாலும் அவ்விதம் பாராயணஞ் செய்யும்பொழுது அர்த்தானுஸந்தானத்துடனும் பாராயணஞ் செய்வதால் "अश्याम भद्रमश्नुते" என்றபடி ஸகல க்ஷேமத்தையுமடையலாம் என்று கூறியிருப்பதாலும இதை யாவர்க்கும் பயன்படுமாறு எளிய தமிழ் நடையில் மொழி பெயர்த்திருக்கிறோம். இந்த துர்க்கா ஸூக்தத்தைப் பாராயணஞ் செய்வதுடன் துர்க்கா தேவியின் பிரதிமா பூஜையும் செய்ய வேண்டியதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ஆஸ்திக சிகாமணிகள் யாவரும் நமது இந்தக் காரியத்தில் இடையிடையே நேர்ந்துள்ள தென் மொழி இலக்கண வழுக்களைச் சற்றேனும் பொருட்படுத்தாது குறிப்பான நமது நோக்கங்கள் சபலமாகும்படி பலதுறைகளிலும் உதவிபுரியுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

இங்ஙனம் :

மஹா மஹோபாத்தியாய வேதாந்த கேஸரீ

பிரம்மஸ்ரீ கணபதி சாஸ்திரிகளவர்களின் சிஷ்யரும்

வியாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கதரும்

சோதிட சாஸ்திர பாரங்கதருமான

ப்ரம்ஹஸ்ரீ, கடலங்குடி, பண்டித நடேச சாஸ்திரிகள்.

17, நடேசய்யர் தெரு, : : மாம்பலம்.

ओं श्रीदुर्गायै नमः ॥

# श्रीदुर्गासूक्तम् ॥

அவதாரிகை,—अथानिष्टपरिहारार्थत्वेन जप्या मन्त्राः, तत्र प्रथममाह (பிறகு அநிஷ்ட பரிஹாரத்திற்காக ஜபிக்க வேண்டிய மந்திரங்கள் படிக்கப்படுகின்றன. அவற்றுள் முதல் ருக்கைச் சொல்லுகிறார்). என்று ஸாயண பாஷ்யத்தில் அவதாரிகை எழுதப்பட்டிருக்கிறது.

**ओं जातवेदसे सुनवाम सोममरातीयतो निदहाति वेदः। स नः पर्षदति दुर्गाणि विश्वा नावेव सिन्धुं दुरितात्यग्निः॥**

(ப—ரை.) वेदः=ஸர்வக்ஞராயிருக்கிற (यः=எந்தப் பரமேஶ்வரன்) अरातीयतः=எங்களிடத்தில் சத்துருத் தன்மையைச் செய்ய விருப்பமுள்ளவர்களை निदहाति=நாசஞ் செய்கின்றாரோ सोमम्=சந்திரனை (शिरसि दधानम्=சிரஸ்ஸில் தரித்தவரும்) जातवेदसे=நித்ய சித்த ஞானமுள்ளவருமான (तस्मै=அந்தப் பரமேசுவரனின் பொருட்டு सुनवाम=ஸ்தோத்திரஞ் செய்வோமாக. अग्निः=தன்னை யுபாஸிப்பவர்களை மேலான நிலைக்குக் கொண்டு வருகிறவரான सः=அவர் नः=எங்களுடைய विश्वा=எல்லா விதமான दुर्गाणि=கஷ்டங்களையும் अतिपर्षत्=நன்றாய் நாசஞ் செய்யட்டும் (किञ्च=மேலும்) नावा=கப்பலால் सिंधुमिव=சமுத்திரத்தைப் போல दुरिता=பாப சமுத்திரத்தை अति (तारयेत्)=நன்றாய் கடக்கும்படி செய்ய வேண்டும்.

(க—ரை.) "ईशानस्सर्वविद्यानाम्" (எல்லா வித்தைகளுக்கும் ஈசன்) என்றபடி சகல வித்யாப்பிரவர்த்தகராயும்,

ஸ்வயம் எல்லாவற்றையுமறிந்தவ்ராயும், தன்னையுபாஸிப்பவர்களை மேலான நிலையிற் கொண்டு வருகிறவராயும், சந்திர கலையைச் சிரஸில் அணிந்திருப்பதிலிருந்து தன்னை யுபாசிப்பவர்களின் தோஷங்களைக் கவனியாது குணத்தையே பாராட்டுந்தன்மையை வெளிக்காட்டுகின்றவராயு மிருக்கிற பரமேசுவரனை நான் ஸ்துதிக்கின்றேன். என்றால் ஸ்துதிக்கப்பெற்ற பரமேஸ்வரன் எனது பாபங்கள் யாவையும் போக்குவதுடன் அப்பாபங் காரணமாய் நேர்ந்துள்ள ஸகல துக்கங்களையும் அடியோடு நாசஞ் செய்ய வேண்டும். கப்பலோட்டி கப்பலைக் கொண்டு தன்னை வந்தடைந்த ஜனங்களை சமுத்திர தரணஞ் செய்விப்பது போல தயாமூர்த்தியான பரமேஸ்வரனும், அவரையே சரணமடைந்த என்னை இந்த ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரை யேற்றி யானடைய வேண்டிய பதத்தைத் தர வேண்டும். (எ—று.)

## तामग्निवर्णां तपसा ज्वलन्तीं वैरोचनीं कर्मफलेषु जुष्टाम्।
## दुर्गां देवीं शरणमहं प्रपद्ये सुतरसि तरसे नमः॥ २ ॥

(ப—ரை.) **अग्निवर्णाम्**=அக்னியின் நிறமுள்ளவளாயும் **तपसा**=தனது சரீரத்தின் சூடுகையால் **ज्वलन्तीम्**=(தன்னை உபாஸிப்பவர்களின் சத்துருக்களை)ப் பொசுக்குகிறவளாயும் **वैरोचनीम्**=பரமாத்மாவான பரமேஸ்வரனின் பார்யையாயும் **कर्मफलेषु**=அந்தந்தக் கர்மங்களின் பலன்களான, சுவர்க்கம், பசு, புத்திரன், சம்பத்து முதலியவைகள் கிடைப்பதற்காக **जुष्टाम्**=உபாஸகர்களால் பக்தியுடன் ஸேவிக்கப்பட்டவளாயும் **ताम्**=லோக வேத பிரசித்தையாயும் இருக்கிற **दुर्गां देवीम्**=துர்க்கா தேவியை **अहम्**=நான் **शरणम्**=சரணமாக **प्रपद्ये**=அடைகிறேன். **सुतरसि**=ஸம்ஸாரஸாகரத்தை ச்சுலபமாகத்

தாண்டும்படி செய்பவளே! तरसे=ஸம்ஸாரஸாகரத்தை தாண்டும்படி செய்பவளான (ते=உனக்கு) नमः=நமஸ்காரம்

(க—ரை.) ஹே பரப்ரும்ஹ மஹிஷியான துர்க்கா தேவியே! நன்றாய் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அக்னிக்குச் சமானமான உருவத்துடன் எனது சத்துருக்களுக்கு முன் தோன்றி சரீரத்தின் உக்கிரமான காந்தியாலேயே அவர்களை நாசஞ் செய்ய வேண்டும். புத்திரகாமேஷ்டிக்குப் புத்திரனென்றும், ஜ்யோதிஷ்டோமத்திற்கு சுவர்க்க மென்றும் இவ்விதம் தனித்தனியே ஒவ்வொரு கர்மத்திற்கும் பலன்கள் உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அப்பலன்கள் யாவும் தங்களை உபாசிப்பதாலேயே சித்திக்க வேண்டும். மேலும் இம்மையில் சுகமாய் வாழ்ந்து, மறுமையில் சுலபமாய் மோக்ஷம் என்ற சிறந்த புருஷார்த்தத்தையும் பெறவேண்டும். மஹான்களின் பிரஸாதத்தைப் பெறுவதற்குச் சரணம் புகுதலே உத்தமஸாதனமாதலால் தங்களைச் சரணமடைகிறேன். மேற்கோரியவைகளை எனக்குக் கொடுத்தருள வேண்டும் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

अग्ने त्वं पारया नव्यो अस्मान्स्वस्तिभिरति दुर्गाणि विश्वा। पूश्च पृथ्वी बहुला न उर्वी भवा तोकाय तनयाय शंयो: ॥ ३ ॥

(ப—ரை.) अग्ने=உபாஸகர்களை மேலான நிலையிற் கொண்டு சேர்க்கின்ற ஹே பரமேசுவரனே! नव्य:=துதிக்கத் தகுந்தவரான त्वम्=நீர் अस्मान्=(உபாஸகர்களான) எங்களை स्वस्तिभि:=க்ஷேமத்தைத் தரத்தக்க உபாயங்களால் विश्वा=எல்லா விதமான दुर्गाणि=ஆபத்துக்களையும் अति (लंघयित्वा)=தாண்டும்படி செய்து पारय=ஸம்ஸாரஸாகரத்தின் கரை

யையடையும்படிச் செய்யும் (किञ्च=மேலும்) नः=எங்களுக்கு (त्वत्प्रसादात्=தங்களது பிரஸாதத்தால்) पूश्च=வாஸயோக்கியமான பட்டினமானது पृथ्वीவிஸ்தீர்ணமாக भवतु=உண்டாகட்டும் उर्वी=பயிர்களை யுண்டுபண்ணுவதற்கு யோக்கியமான பூமியும் बहुला=அதிகமாக भवतु=உண்டாகட்டும் (त्वञ्च=நீரும்) तनयाय=எனது சரீரத்திலிருந்து உண்டான புத்திரனுக்கும் तोकाय=அவனது புத்திரனுக்கும் शंयोः=சுகத்தைச் சேர்த்து வைக்கிறவராக भव=ஆவீராக. (எ-று.)

(க-ரை.) ஹே பரமேசுவரனே! தாங்கள் உபாசகர்களை உயர்ந்த நிலையிற் கொண்டு சேர்க்கின்றவர்களாகையால் தங்களையுபாசிக்கும் நாங்கள் இம்மையில் நேரக்கூடிய ஆபத்துக்கள் யாவையும் சுலபமான உபாயத்தால் தாண்டி புத்திர பௌத்திராதிகளுடனும், விஸ்தாரமான வீடு வாசல்களுடனும், தான்னியங்கள் விளையும் பூமிகளுடனும் சுகமாய் வாழ்ந்து மறுமையில் மோக்ஷமென்ற சிறந்த புருஷார்த்தத்தையும் அடையும்படி அருள்புரிய வேண்டும். அதற்காகத் தங்களைத் துதிசெய்கிறேன் என்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)

विश्वानि नो दुर्गहा जातवेदस्सिन्धुं न नावा दुरितातिपर्षि।
अग्ने अत्रिवन्मनसा गृणानोऽस्माकं बोध्यविता तनूनाम् ॥

(ப-ரை.) जातवेदः=ஹே ஸர்வக்ஞனான பரமேஶ்வரனே! दुर्गहा=உபாஸகர்களின் ஆபத்துக்களைப் போக்குகின்ற (त्वम्=நீர்) नावा=கப்பலால் सिन्धु न=சமுத்திரத்தைப் போல नः=எங்களுடைய विश्वानि=ஸமஸ்தமான दुरिता=பாபங்களையும் अतिपर्षि=நன்கு கடக்கும்படி செய்கிறீர்கள். அதாவது:- பாபங்களை நாசம் செய்கிறீர். अग्ने=உபாஸகர்களை

மேலான நிலைக்குக் கொண்டு வருகின்றவரே! अत्रिवत्=* ஆத்யாத்மிகம் முதலிய மூன்று துக்கங்களுமில்லாத ஜீவன் முகதனை மஹான்போல (त्वमपि=தாங்களும்) मनसा=மனத்தினால் गृणानः=எனது க்ஷேமத்தைக்கோருகின்றவராகவும் तनूनाम्=தங்கள் சரீர பூதர்களான अस्माकम्=எங்களை अविता=ரக்ஷிக்கின்றவராகவும் भूत्वा=ஆகி बोधि=என்னை கவனிக்க வேண்டும். (எ—று.)

(க—ரை.) "यस्सर्वस्मिंस्तिष्ठन् सर्वमन्तरो यमयति" என்றும் "यस्य सर्वं शरीरम्" "आत्मनि तिष्ठन्नात्मनोऽन्तरः" என்றும் உபதேசித்தபடி தாங்கள் ஸர்வாந்தர்யாமியாகவும் ஸர்வ ஶரீரியாகவு மிருப்பதாலும், ஶரீரபூதனை என்னிடத்திலுள்ள தோஷங்களை விலக்கி காப்பாற்ற வேண்டுவது ஶரீரியான தங்களுடைய கடமையாயிருக்கின்றது. தங்களை யுபாஸிக்கின்ற என்னுடைய ரக்ஷணை விஷயத்தில் "आत्मौपम्येन सर्वत्र दयां कुर्वन्ति साधवः" (ஸாதுக்கள் தன்னையே திருஷ்டாந்தமாகக் கொண்டு அனைவரிடத்திலும் தயையைச் செலுத்துகின்றனர்) என்றும், सर्वे त्र सुखिनस्सन्तु सर्वे सन्तु निरामयाः (யாவரும் சுகிகளாக இருக்கட்டும், யாவரும் வியாதியற்றவர்களாக ஆகட்டும்) என்றும் சொன்னபடி ஆத்

* பொதுவாய் ஜீவராசிகளுக்கு சம்பவிக்குந் துக்கம் आध्यात्मिकम्, आधिभौतिकम्, आधिदैविकम् என மூன்று வகைப்படும். வியாதி பந்து வியோகம், பொருட் சேதம் முதலியவைகளால் ஏற்படும் துக்கம் आध्यात्मिकम् எனறும்; பாம்பு தேள் புலி கரடி முதலியவைகளால் உண்டாகுந் துக்கம் आधिभौतिकम् என்றும், அதிக மழை, மழையே பொழியாதிருத்தல், இடி மின்னல் இவைகளால் ஏற்படும் துக்கம் आधिदैविकम् என்றும் சொல்லப்படும்.

யாத்மிகம் முதலிய தாபங்களற்ற ஜீவன் முக்தர்கள் அனேவருடைய க்ஷேமத்தையும் தியானிப்பது போலவே தாங்களும் தங்களையுபாஸிக்கின்ற என்னிடத்தில் உண்மையான ப்ரேமை கொண்டவர்களாய் பசு புத்திராதிகளைத்தந்து இம்மையிலும், மோக்ஷத்தைதந்து மறுமையிலுங் காப்பாற்ற வேண்டுமென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

**पृतनाजितँ सहमानमुग्रमग्निँ हुवेम परमात्सधस्थात् ।**

**स नः पर्षदतिदुर्गाणि विश्वा क्षामद्देवो अतिदुरितात्यग्निः॥**

(ப—ரை.) पृतनाजितम्=ஶத்ரு சேனையை ஜயிக்கின்றவரும் सहमानम्=(ஆனது பற்றியே) ஶத்துருக்களை அவமதிப்பவரும் उग्रम्=(வழிதப்பி நடக்கும் யாவர்க்கும்) பயத்தை யுண்டுபண்ணுகிறவரும் अग्निम्=உபாசகனைமேலான நிலைக்குக் கொண்டு வருகிற வருமான உம்மை परमात्= உத்கிருஷ்டமான सधस्थात्=பரிவாரங்களுடன் சேர்ந்து வசிக்குமிடத்திலிருந்து (என்னைக் காப்பாற்ற வரும்படி) हुवेम= அழைக்கிறோம் सः=(எங்களால் அழைக்கப்பட்ட) அந்த பரமேசுவரன் नः=எங்களை विश्वा=ஸமஸ்தமான दुर्गाणि=கஷ்டங்களையும் अतिपर्षत्=கடக்கும்படி செய்யட்டும். अग्निः=அக்கினி போலப் பிரகாச வடிவமானவரும் क्षामत्=பொறுமையுள்ளவருமான देवः=மகாதேவன் अतिदुरिता=கொடூரமான ப்ரம்ஹஹத்தி முதலிய பாபங்களையும் अति (लंघयेत्)=கடக்கும்படி செய்ய வேண்டும். (எ—று.

குறிப்பு.—भीषास्माद्वातः पवते என்று தொடங்கி (வாயு முதலிய தேவர்கள் இவரிடமிருந்துண்டான பயத்தால் தத்தமது கார்யத்தை வழுவாமல் நடத்துகின்றனர்) என்று

உபதேசித்தபடியும், **नम उग्राय च भीमाय च** என்று ஸ்ரீ ருத்திராத்யாயத்தில் உபதேசித்தபடியும் இந்த மந்திரத்திலும் ஸகல பயஹேதுவாயிருக்குந்தன்மை என்ற பரமேஶ்வரனின் அஸாதாரண குண விசேஷமானது **उग्रम्** என்ற பதத்தால் உபதேசிக்கப்பட்டது.

(க—ரை.) ஹே பரமேஶ்வர! **पृतनाजितम्**=(சத்ருசேனையைஜயிக்கின்றவர்)என்றதாலும், **उग्रम्**=(வழிதப்பிநடக்கின்றவர்களுக்குப் பயத்தை யுண்டாக்கி அவர்களை நல்வழி நடக்கச் செய்கின்றவர்) என்றதாலும் வெளியாகும் ஸர்வசக்தனுயிருக்குந்தன்மையும், **परमात्सधस्थात्** (பரிவாரங்களுடன் மேலான பரமபதத்தில் வஸிப்பவர்) என்றதால் வெளியாகும் பரமபத நாயகனு யிருக்குந்தன்மையும், **अग्निम्** (உபாஸகர்களை மேலான நிலைக்குக் கொண்டு வருகின்றவர்) என்றதால் வெளியாகுந்தயையும் வாய்ந்தவர்களாய் தாங்களிருப்பதால் பாபகர்மங் காரணமாய்ப் பலவிதத் துக்கங்களை யனுபவிக்குந் தீனனான எனது அழைப்புக் கிணங்கி பரிவாரங்களுடன் வந்து பாபங்களையும் அது காரணமாய் நேர்ந்துள்ள அடியேனது ஸகல துக்கங்களையும் விலக்கி ஆட்கொள்ள வேண்டுமென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று)

**प्रत्नोषि कमीड्यो अध्वरेषु सनाच्च होता नव्यश्च सत्सि।**
**स्वां चाग्ने तनुवं पिप्रयस्वास्मभ्यं च सौभगमायजस्व ॥**

(ப—ரை) **अग्ने**=ஹே பரமேஶ்வரனே! **अध्वरेषु**=யாகங்களில் **ईड्य:**=துதிக்கத்தகுந்த வராயிருக்கிற (**त्वम्**=நீர்) **कम्**=(கர்மபலனான) ஸுகத்தை **प्रत्नोषि**=அதிகமாகக் கொடுக்கிறீர் (**किञ्च**=மேலும்) **सनाच्च**=கர்மபலனைக் கொடுப்பவராயிருப்பதுடன் **होता**=ஹோமஸாதன பூதராவும் **नव्यश्च**=துதிக்கத்தகுந்த

வராகவும் सत्सि=(யாகபூமியில்) வஸிக்கிறீர் अग्ने=ஹே பரமே சுவர स्वाम्=ஸ்வகீயமான तनुवम्=சரீரத்தை पिप्रयस्व=உமக்குரிய ஹவிஸ்ஸினால் திருப்தி செய்து கொள்ளும் (ततः=அவ்விதம் திருப்தி செய்து கொள்வதிலிருந்து) अस्मभ्यंच=எங்களுக்கும் सौभगम्=பாக்கியத்தை आयजस्व=பல வழிகளிலுந் தந்தருளும். (எ—று.)

(க—ரை.) ஹே பரமேஶ்வர! தாங்கள் ஸர்வகர்ம ஸமாராத்யராகவும் ஸர்வ கர்ம டலப்ரதாதாவாகவும், ஸர்வாந்தர்யாமியாகவு மிருப்பது பற்றி होता முதலிய ருத்விக்குகளின் அந்தர்யாமியாகவு மிருந்து ஸ்வாராதனமான கர்மாவை ஸ்வயமே நடத்தி வைக்கின்றீர்கள். ஆகவே அந்தர்யாமியான தாங்கள் தீனனான அடியேன் செய்யுங் காரியங்களையும் அவ்விதமே நடத்தி வைத்து அதன் மூலம் திருப்தி யடைந்தவர்களாய்க் கொண்டு இம்மையில் ஸகல ஸௌபாக்கியத்தையும் மறுமையில் மோக்ஷத்தையும் தந்து காத்தருள் புரிய வேண்டு மென்று இதனால் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

குறிப்பு.—अध्वरेषु ईड्यः (யாகங்களில் துதிக்கத்தகுந்தவர்) என்றதால், ஸர்வ கர்ம ஸமாராத்யனாயிருக்குந் தன்மையும், कं प्रत्नोषि (கர்ம ஜன்யமான சுகத்தைத் தருகின்றவர்) என்றதால் फलमत उपपत्तेः (கர்ம பலன் அவரிடமிருந்தே உண்டாகின்றது அதற்குத்தக்க யுக்தி இருப்பதால்) என்று ப்ருஹ்ம ஸூத்திரம் 3வது அத்தியாயம் 2வது பாதம் 28வது ஸூத்திரத்திலும், सवा एष महानज आत्मा अन्नादो वसुदानः (அந்தப்பரமாத்மாவே காலா பக்கங்களிருந்தும் அன்னத்தைத் புஜிக்கிறார் அவரே தனத்தையுந்தருகிறார்) என்று ப்ருஹதாரண்யகத்திலும் लभते च ततः कामान्मयैव विहितान् हितान् என்று பகவத்கீதையிலுஞ் சொன்னபடி ஸர்வ கர்ம

பலனைக் கொடுப்பவரா யிருக்குந்தன்மையும் வாய்ந்தவர் என்றதால் கேவல அக்நி தேவதையினிடம் ஒரு பொழுதும் பொருந்தாத பரமேசுவர அசாதாரண மஹிமா விசேஷமானது உபதேசிக்கப்பட்டது.

**गोभिर्जुष्टमयुजो निषिक्तं तवेन्द्र विष्णोरनुसंचरेम।**
**नाकस्य पृष्ठमभिसंवसानो वैष्णवीं लोक इह मादयन्ताम्॥**

(ப—ரை.) **इन्द्र**=ஹே பரமேசுவர **अयुजः**=தக்க ஸம்பந்த மற்றவராயும் **विष्णोः**=ஸர்வ வியாபகராயுமிருக்கிற **तव**= உம்மை **गोभिः**=பசுக்களால் **जुष्टम्**=ஸேவிக்கப்பட்டதாயும் **निषिक्तम्**=(அமுதப் பெருக்கால்) நனைக்கப்பட்டதாயுமுள்ள (**महाभाग्यमुद्दिश्य**=அழியாப் பெருஞ் செல்வத்தைக் குறித்து) **अनु**=ஆசார்யோபதேசத்திற்கிணங்க **संचरेम**=ஸேவிக்கின்றோம். **नाकस्य**=பரம பதத்தினுடைய **पृष्ठमभि**=நாலா பக்கங்களிலும் **संवसानः**=வசிக்கின்றவர்களான (தேவர்கள்) **इह**= இந்த **लोके**=பூலோகத்தில் **वैष्णवीम्**=சர்வ வியாபகரான தங்களது பத்தினியை யுபாஸிக்கின்ற என்னை **मादयन्ताम्**=ஸந்தோஷப்படுத்தட்டும். (எ—று.)

(க—ரை.) **अङ्गान्यन्या देवताः** (மற்ற தேவர்கள் இவரது அங்கங்கள்) என்றபடி தங்களது அங்கபூதர்களும், தங்களது ஆக்ஞையை எதிர் பார்த்து பரமபதமான ஸ்ரீ கைலாஸத்தில்தங்களது அருகிலேயேவஸிப்பவர்களுமான குபேரன் முதலிய தேவர்கள் தக்க ஸம்பந்தமற்றவரும், ஸர்வாந்தர்யாமியுமான தங்களை உபாஸிக்குமெனக்கு பணம் பசு முதலியன நிறைந்த ஸௌபாக்கியத்தையும், அதை அநுபவிக்குங் காலத்து அமுதானுபவத்துக் கொப்பான அதிக ஸந்தோஷத்தையுந் தரும்படி அவர்களுக்கு ஆக்ஞை செய்து அத்தேவர்

கள் வாயிலாகவும் நேறிலும் தாங்கள் அடியேனை கார்த்தருள வேண்டு மென்று இதனல் பிரார்த்திக்கப்பட்டது. (எ-று.)

**कात्यायनाय विद्महे कन्यकुमारि धीमहि ।**

**तन्नो दुर्गिः प्रचोदयात् ॥**

(ப—ரை.) **कन्यकुमारि**=காத்தியாயனருக்குப் புத்திரியாகப் பிறந்தவுடன் கன்னிகையாயும், கொஞ்சம் வயது சென்ற பிறகுக் கல்யாணமாவதற்கு முன் குமாரியாயும் இருந்த ஹே துர்க்கா தேவியே! **विद्महे**=வேதம், சாஸ்திரம், குருபதேசம் இவைகளால் எல்லாத் தேவர்களுக்கும் மேலானவளாகவும், பக்தியொன்றினல் மட்டும் ஸுலபையாகவும் உன்னை தெரிந்து கொள்ளுகிறோம் (**विदित्वाच**=அவ்விதந் தெரிந்து கொண்டு) **कात्यायनाय**=காத்யாயனர் என்ற உனது பிதாவுக்கு (**भुक्तिमुक्तिप्रदात्रीम्**=இம்மையில் சகல போகங்களையும், மறுமையில் மோக்ஷத்தையும் கொடுத்தருளிய உன்னை) **धीमहि**=இடைவிடாமல் தியானஞ் செய்கிறோம் **तत्**=அவ்விதம் தியானஞ் செய்வதற்காக **नः**=எங்களை **दुर्गिः**=துர்க்கா தேவியானவள் **प्रचोदयात्**=தூண்ட வேண்டும். (எ—று.)

(க—ரை.) ஹே துர்க்கா தேவியே! தங்களது சுவரூபஸ்வபாவாதிகளைத் தெரிந்து கொள்வதும், அதற்கிணங்க எவ்வித விக்கினமுமின்றி த்யானஞ்செய்வதும் தங்களது அநுக்கிரஹமின்றி ஏற்படாதாகையால் தாங்களே தயவு செய்து என்னைத் தங்கள் பக்தனைச் செய்து இம்மையிலும் மறுமையிலும் க்ஷேமத்தைக் கொடுக்க வேண்டுமென்று இதனல் பிரார்த்திக்கப்பட்டது. (எ—று.)

ஸ்ரீ துர்க்கா ஸூக்தம் முற்றிற்று.



## கடலங்குடி நடேச சாஸ்திரிகளால் வெளியிடப்பட்ட, தேவ நாகரலிபியில் மூலமும் தமிழுரையுமுள்ள புஸ்தகங்கள்.

1. ப்ருஹத் ஜாதகம்--இதற்குப் பல வியாக்கியானங்களுக் கிணங்கவும், சொந்தமான அனுபவங்களுக் கிணங்கவும் தமிழில் உரை எழுதி நாகரலிபியில் மூலத்துடன் வெளியிட்டிருக்கிறோம். பல சாஸ்திரத்திற் பழகுகின்றவர் இப்புஸ்தகத்தைப் படிப்பது மிக அவசியம். டிம்மி 1க்கு 8ல் சுமார் 750 பக்கங்களுள்ளது. கிளேஸ் ரூ. 8. ரப் ரூ. 7.

2. ஜாதக த்வாதசபாவ பலநிர்ணயம் —முதற்பாகம். (1ம் பாவம் முதல் 5ம் பாவம் முடிய) இதில் பராசரஸம்ஹிதை, ஸாராவளீ, ஸர்வார்த்த சிந்தாமணி முதலிய கிரந்தங்களில் ஷை பாவங்கள் விஷயமாய் கூறியுள்ள வசனங்கள் யாவையும் எழுதி தமிழில் பெயர்த்திருக்கிறோம். கிளேஸ் ரூ. 3–8 ரப் ரூ 3.

3. ஷை 2ம் பாகம்—இதில் 6, 7, 8-வது பாவபலன்கள் முற் கூறியபடி அடங்கியிருக்கின்றன. ஸ்த்ரீ ஜாதகபலன் விரிவாய் எழுதப்பட்டிருக்கிறது. கிளேஸ் ரூ. 3–8. ரப் ரூ. 3.

4. ஷை 3ம் பாகம்.—இதில் 9, 10, 11, 12-வது பாவபலன்கள் முற் கூறியபடியுள்ளன. கிளேஸ் ரூ. 3. ரப் ரூ. 2–8.

5. உடுதசாபல நிர்ணயம்.—தசை, புக்தி, அந்தரம், ஸூக்ஷ்மம், ப்ராணன் வரையுள்ள அதாவது:—ஒவ்வொரு நாழிகையிலும் நடக்கும் பலனை இதன்மூலம் நன்கறிந்து கொள்ளக்கூடும். சுமார் 480 பக்கங்களுள்ளது. கிளேஸ் ரூ. 4. ரப் 3–8.

6. பலதீபிகை.—இது ஜாதகபலனைத் தெளிவாக விளக்குகின்றது. பலபாகத்தில் இதில் கூறப்படாத முறை வேறிராதென்று கூசாமற் கூறலாம். கிளேஸ் ரூ 3–8 ரப் ரூ 3.

7. சகுனபல நிர்ணயம்.—ஸ்ரீவராஹ மிஹிராசாரியாரால் ப்ருஹத்ஸம்ஹிதையில் 85-வது முதல் 11 அத்தியாயங்களால் உபதேசிக்கப்பட்ட சகுன பலனடங்கியது ரூ 1–4–0.

8. கோசாபல நிர்ணயம்.—இதில் கோசரபலன் பார்க்க வேண்டிய முறைகள் விரிவாய் கூறப்பட்டிருக்கின்றன. அணா 12. ஷை இங்கிலீஷ் டிரான்ஸ்லேஷன். அணா 12.

9. ஜாதகசந்திரிகை—இது சோதிடசாஸ்திரமாகிற இரும்புப்பெட்டிக்குத் திறவுகோலாகும். விவாஹத்திற்கு வேண்டிய 10 விதப்பொருத்தங்களுமிதிலடங்கி யிருக்கின்றன. ரூ 1.

10. ப்ரச்னருடபலநிர்ணயம்.-இது ப்ரச்னசாஸ்திரம். இது ப்ரச்னருடபலனை விளக்குகின்றது கிளேஸ் ரூ. 1–4–0. ரப் ரூ. 1.

11. நஷ்ட ஜாதகம்—இதனால் ஜாதகமில்லாதவரும் தமது ஜாதகத்தைக்கணிக்கலாம். அணா 4 (5அணா ஸ்டாம்பு அனுப்பவும்.

12. நவக்கிரஹாராதனக் கிரமம்—இதில் பூஜாக்கிரமம், மந்திரம், ஸ்தோத்திரம், கவசம், அஷ்டோத்தரம், ஆதித்யஹிருதயம் இவைகள் தேவநாகரலிபியிலுள்ளன. மந்திரங்களுக்குத் தமிழுரையுள்ளது. கிளேஸ்ரூ. 1—4—0. ரப் ரூ. 1.

13. ருக் யஜுஸ் ஸாமவேதிகளின் ஸந்தியா வந்தனம்—இதில் மூன்று வேதிகளின் ஸந்தியா மந்திரங்களை தேவநாகரம் தமிழ் என்ற இரண்டு எழுத்திலுமச்சிட்டிருப்பதுடன் அவற்றுக்குப் பதவுரை கருத்துரை விசேஷவுரை இவைகளையும் தமிழில் வெளியிட்டிருக்கிறோம். ஸந்தியா வந்தனத்திலடங்கிய ஒவ்வொரு விஷயமும் ஆக்ஷேபஸமாதானங்கள் வாயிலாக நன்கு விசாரிக்கப்பட்டிருப்பதாலிதைப் படிக்குமனைவர்க்கும் வைதிக கர்மத்தில் ச்ரத்தையையுண்டாக்குவதாக இப்புஸ்தகமிருக்கின்றது. மந்திரங்களின் கருத்தறிந்து செய்வதேமானிடப் பிறவிக்கும் சாஸ்திரங்களுக்கும் ஸம்மதமாகும். விலை கிளேஸ் ரூ 1—8—0. ரப்பு ரூ 1—4—0.

14. மந்திரப்ரச்னம்.—விவாஹம், உபநயனம் முதலிய கர்மங்களின் மந்திரங்களும் அவற்றின் தமிழுரையு மிதில் அடங்கியிருக்கின்றன கிளேஸ் ரூ. 3. ரப் ரூ. 2-8-0.

15. தைத்திரீயோபநிஷத்—இதில் சிக்ஷாவல்லீ, ஆனந்தவல்லீ, பிருகுவல்லீ என்ற மூன்று வல்லிகளுக்கும் ஸ்ரீசங்கரபாஷ்யத்துக்கிணங்க அர்த்தமும், ஆங்காங்கு வித்யாரண்ய ஸ்வாமிகளால் எழுதப்பட்ட விசேஷமான பொருளும், விசிஷ்டாத்வைத மதப் பொருளும் தமிழில் வெளியிடப்பட்டிருக்கின்றன. ஆண்டிக் பேபர் ரூ. 4. கிளேஸ் ரூ. 3.

16. தைத்திரீயாரண்யகம் முதல் ப்ரச்னம்.—இதுவே அருணம் என்றும், ஸூர்ய நமஸ்கார ப்பிரச்னம் என்றும் சொல்லப்படும். ரூ. 2-8—0.

17. புருஷஸூக்தம் முதலியன.—இதில் புருஷஸூக்தம், ஸ்ரீஸூக்தம், துர்க்கா ஸூக்தம், விஷ்ணு ஸூக்தம், இவை தமிழுரையுடன் அடங்கி இருக்கின்றன. ரூ. 1.

18. ஸ்ரீருத்திரம் சமகம்.—கிரந்தம் தேவநாகரம் இரண்டிலும் மூலமும் தமிழுரையுமுள்ளது. கிளேஸ் ரூ. 1—8—0.

19 யஜுர் வேத ஸந்தியா வந்தனம்—இதில் த்ரிகால ஸந்தியா வந்தனம், அமாவாஸ்யா தர்ப்பணம், ப்ரம்ஹயஞ்ஞம் யஞ்ஞோபவீததாரணம் இவற்றின் மந்திரங்கள் தேவநாகர எழுத்தில் ஸ்வரக் குறியுடனடங்கி இருக்கின்றன. விலை அணு 3· (0-3-9 க்கு ஸ்டாம்பு அனுப்பியும் இதைப் பெறலாம்.)

20. யாஜுஷ ஸூர்ய நமஸ்கார மந்திரங்கள்.—இதில் ஸூரிய நமஸ்கார மந்திரம், நவக்கிரஹ மந்திரம் ஆதித்யஹிருத

ய் இவை தேவ நாகரம், கிரந்தம் இவற்றில் மூலமுள்ளதாயும் தமுரையுள்ளதாயுமடங்கி இருக்கின்றன. அணு 5.

21. ஆதித்யஹிருதய ஸ்தோத்திரம்.—நாகரம் தமிழ் இரண்டிலும் மூலமும்தமிழுரையுமுள்ளது (ஆரோக்யத்தையும், ஜயத்தையும் கொடுப்பது) அணு-2. 2-9அணுவுக்கு ஸ்டாம்பு அனுப்பவும்.

22. ஸ்ரீகோபிகாகீதம்.—ராஸக்ரீடா காலத்தில் ஸ்ரீ கோபிகைகள் பாடிய சுலோகரூபமான பாடல்கள். முகவுரையில் ராஸக்ரீடா ரஹஸ்யார்த்தம் கூறப்பட்டுள்ளது. அணு 12.

23. பாதஞ்ஜல யோகஸூத்திரம்.—இது பதஞ்ஜலிமஹருஷியால் செய்யப்பட்டது. இது ஹடயோகமல்ல ராஜயோகமாகும். தமிழுரையுடன் கூடியது கிளேஸ் ரூ 3· ரப் ரூ 2–8.

24. ஈசகேனுபநிஷத்துகள்.—தேவநாகரலிபியில் ஸ்ரீசங்கரபாஷ்யத்துடனும் தமிழ் மொழிபெயர்ப்புடனும் கூடியது ரூ· 2.

25. காடகோபநிஷத்.—தேவநாகரலிபியில் ஸ்ரீசங்கரபாஷ்யத்துடனும், தமிழுரையுடனும் கூடியது ரூ. 1–8–0.

26. ப்ரம்ஹஸூத்திர சாங்கரபாஷ்யம்.

நாகர எழுத்தில் மூலமும் தமிழுரையுமுள்ளது. சங்கர பாஷ்யத்தை பாமதி, ப்ரம்ஹவித்யாபரணம், ராமாநந்தீயம், நியாயரக்ஷாமணி முதலிய வியாக்கியானங்களை யொட்டி ஒரு எழுத்துக் கூடவிடாமல் தமிழில் பெயர்த்திருக்கிறோம். வையாஸிக நியாயமாலையையும் கருத்துரையுடன் வெளியிட்டிருக்கிறோம்.

ப்ரம்ஹ ஸூத்திர சாங்கரபாஷ்யத்தின் விலை விவரம்.

| | | கிளேஸ். | | ஆண்டிக். | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | அ. | ரூ. | அ. |
| (1) | முதலாவது அத்தியாயம் | 8 | 0. | 10 | 0. |
| (2) | இரண்டாவது அத்தியாயம் | 6 | 0. | 8 | 0. |
| (3) | மூன்றாவது அத்தியாயம் | 6 | 0. | 8 | 0. |
| (4) | நான்காவது அத்தியாயம் | 2 | 8. | 4 | 0. |

கிளேஸ் காபி 4 அத்தியாயத்தின் மொத்த கிரயம் ரூ· 22–8–0 எல்லாம் மூன்று புஸ்தகமாக உயர்ந்த காலிகோ பைண்டு செய்தது..

ஷை கிரந்த எழுத்தில் மூலமும் தமிழுரையுமுள்ளது. 2-வது அத்தியாயம் ரூ. 6. 3-வது அத்தியாயம் ரூ. 6. 4-வது அத்தியாயம் ரூ. 2–8–0. கிரந்தப்பதிப்பில் முதலத்தியாயம் வெளியிடவில்லை·

## ஸ்ரீமத் பாகவதம்.

தேவநாகர எழுத்தில் மூலமும் தமிழுரையுமுள்ளது.

27. இதற்கு, முற்றிலும் ஸ்ரீதரீயவியாக்கியானத்தையும், ஆங்காங்கு வம்சீதரீயவியாக்கியானத்தையும் தழுவி மூலசுலோகத்

திலுள்ளஒருபதங்கூட விடாமல் எளியநடையில் தமிழில் ஸ்ரீங் எழுதப்பட்டிருக்கிறது. "கல்நெஞ்சையும் கரைந்து ஸ்ரீ இட.... பக்தியிலீடுபடும்படிச் செய்யவல்லது ஸ்ரீமத்பாகவதம்" என்ற அதன் ப்ரஸித்திக்கேற்ப இம்மொழி பெயர்ப்பும் அமைந்திருப்பதாகச் சொல்லுவதுமிகையாகாது.

மேலும் கேரளத்தில் குருவாயூரென்ற திவ்ய க்ஷேத்திரத்தில் வஸித்து வந்த ஸ்ரீநாராயணபட்டர் என்ற மஹாகவியால் ஸ்ரீமத் பாகவதார்த்தத்தைச் சுருக்கி தொடர்ச்சியாக இயற்றப்பட்ட நாராயணீயம் என்ற பகவத்ஸ்துதியும் தமிழில் பதவுரையுடன் ஒவ்வொரு அத்தியாயத்திலும் ஆங்காங்கு சேர்க்கப்பட்டிருக்கிறது.

| ஸ்ரீமத்பாகவத புஸ்தகத்தின் விலை விபரம். | | ரூ. | அ. |
|---|---|---|---|
| (1) | முதலாவது, இரண்டாவது ஸ்கந்தங்கள் | 3 | 8. |
| (2) | மூன்றாவது நான்காவது ,, | 6 | 0. |
| (3) | ஐந்து, ஆறு, ஏழாவது ,, | 6 | 0. |
| (4) | எட்டாவது ஒன்பதாவது ,, | 4 | 0. |
| (5) | பத்தாவது ஸ்கந்தம் பூர்வார்த்தம் | 5 | 8. |
| (6) | பத்தாவது ஸ்கந்தம் உத்தரார்த்தம் | 4 | 8. |
| (7) | பதினொன்றாவது பன்னிரண்டாவது ஸ்கந்தம் | 5 | 8. |

## மூலம் மட்டுமுள்ள புஸ்தகங்கள்.

28. தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்—கிரந்தம், நாகரம், தமிழ் இவற்றில் மூலம் மட்டும். அணா 2.

29. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்.—நாகரலிபியில் மூலம் மட்டும் அணா 5. ஷை கிரந்த எழுத்தில் அணா 5.

30. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்.—பாஸ்கரராயரின் பாஷ்யாதிகளை யனுசரித்துத் திருத்தி அச்சிடப்பட்டது. நாகர எழுத்தில் மூலம் மட்டும். ரப் அணா 5. கிளேஸ் அணா 6.

31. இந்திராக்ஷீ சிவகவச ஸ்தோத்திரம்.—நாகரம், கிரந்தம், தமிழ் என்ற மூன்று எழுத்திலும் தனித்தனி புஸ்தகமாக வெளியிடப்பட்டது. அணா 3. (0–3–9 ஸ்டாம்பு அனுப்பவும்.)

32. ஸுப்ரம்ஹண்ய பூஜாக்கிரமம்.—தேவநாகர எழுத்தில் பூஜாக்கிரமம், இரண்டு புஜங்கஸ்தோத்திரம், ஷோடசாக்ஷரீ மந்திரம், மாலாமந்திரம், கவசம், ஹிருதயம், அஷ்டோத்தரம், 2. ஸஹஸ்ரநாமம் முதலிய 28 விஷயங்களடங்கி இருக்கின்றன. ரூ 1. ஷை தமிழ் எழுத்தில் ரூ. 1. (1–2–0 க்கு ஸ்டாம்பு அனுப்பவும்.)

---

புஸ்தகங்கள் கிடைக்குமிடம்:—கடலங்குடி நடேச சாஸ்திரிகள் 17, நடேசய்யர் தெரு, தியாகராயநகர் போஸ்ட், சென்னை.